# சொல்வயல்

திங்கள் மின்னிதழ்

சொல்வளமே மொழிவளம் நெல்வளமே நாட்டின்வளம்

" சொற்குவை தேரும் பாவலர் மேவத் தொகுப்பீடம்"
(திருவிளையாடற்புராணம்–
தருமிக்குப் பொற்கிழியளித்த படலம்)

ஐ.எஸ்.பி.என் (ISBN): 978-81-958032-0-0

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் வெளியீடு

வயல் : 5 விளைச்சல் : 52 திருவள்ளுவர் ஆண்டு 2055, மடங்கல் –செபுதம்பர் – 2024



## நெடுஞ்சாலைத்துறைக் கலைச்சொற்கள்

| | |
|---|---|
| Center median | – நடுவத் தடுப்பு |
| Crash barrier | – நெரிசல் தடுப்பான் |
| Grade separators | – தடுப்பு இழுவைகள் |
| Highways research station | – நெடுஞ்சாலை ஆராய்ச்சி நிலையம் |
| Infrastructure | – உள்கட்டமைப்பு |
| Junction improvements | – சந்திப்பு மேம்பாடு |
| Land acquisition | – நிலக் கையகப்படுத்தல் |
| Quality Control | – தரக் கட்டுப்பாடு |
| Level crossing | – இருப்புப்பாதைக் கடவு |
| Maintenance contract | – பேணுகை ஒப்பந்தம் |
| Maintenance work | – பேணுகைப் பணி |
| Major district roads | – மாவட்ட பெருஞ் சாலைகள் |
| Metro wing | – பெருநகரப் பிரிவு |
| Pedestrian subway | – சுரங்க நடைபாதை |
| Policy outline | – கொள்கை வரையறை |
| Project components | – திட்ட கூறுகள் |
| Project wing | - திட்டப் பிரிவு |
| Proper planning | – முறையான திட்டமிடல் |
| River bridges | – ஆற்றுப் பாலங்கள் |
| Road network | – சாலை ஒருங்கமைப்பு |
| Road over bridges | – சாலை மேம்பாலங்கள் |
| Road under bridges | – சாலை கீழ்பாலங்கள் |
| Rural roads | – சிற்றூர்ச் சாலைகள் |
| Skywalk | – மேல் நடைபாதை |
| Specific indicator | – குறிப்பிட்ட குறிகாட்டி |

**சொற்குவை (sorkuvai.com) வலைத்தளத்தில் தமிழுக்கு நிகரான ஆங்கிலச் சொற்களையும், ஆங்கிலத்திற்கு நிகரான தமிழ்ச்சொற்களையும் பார்த்துப் பயன்கொள்ளலாம்.**

# சொல்வயல்


செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் வெளியீடு

திருவள்ளுவர் ஆண்டு 2055, மடங்கல் (ஆவணி)

**செபுதம்பர் – 2024**



ஆசிரியர் : திருமதி **க. பவானி**
இயக்குநர் (மு.கூ.பொ.)

பொறுப்பாசிரியர் : முனைவர் **வே. கார்த்திக்**

இதழ்க்குழு : திரு. கி. இராமர்
திரு. ஏ. காந்தி
திருமதி. க. கத்தூரி

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்
முதல் தளம், நகராட்சி நிருவாக அலுவலகக் கட்டடம்,
எண்.75, சாந்தோம் நெடுஞ்சாலை, எம்.ஆர்.சி. நகர்,
சென்னை – 600 028.
மின்னஞ்சல் : solvayal@gmail.com
வலைத்தளம் : www.sorkuvai.com

Directorate of Tamil Etymological Dictionary Project,
First floor, Urban Administrative office Campus,
No:75,Santhome high Road,
MRC Nagar, Chennai–28
Mail id : solvayal@gmail.com
Website : www.sorkuvai.com



ஐ.எஸ்.பி.என் (ISBN):978-81-958032-0-0

# அகரமுதலி இயக்ககத்திற்கு மாண்புமிகு தமிழ்வளர்ச்சித் துறை அமைச்சர் அவர்கள் வருகை!



சென்ற ஆகத்துத் திங்களில், மாண்புமிகு தமிழ்வளர்ச்சித் துறை அமைச்சர் அவர்கள் அகரமுதலி இயக்ககத்திற்கு நேரில் வருகைபுரிந்து, இயக்ககச் செயற்பாடுகளை ஆய்வு செய்து, அகரமுதலிப் பணிகள் மனநிறைவளிக்கத் தக்க வகையில் அமைந்திருப்பதாகப் பாராட்டுத் தெரிவித்தார். அது மேலும் சிறப்புறச் செயலாற்றுவதற்கு ஊக்கமளிப்பதாக அமைந்தது.

தமிழ்நாடு அரசு, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தில் 23.08.2024ஆம் நாள் மாண்புமிகு தமிழ்வளர்ச்சி மற்றும் செய்தித்துறை அமைச்சர் திரு.மு.பெ.சாமிநாதன் அவர்கள் ஆய்வு மேற்கொண்டார். தமிழ்வளர்ச்சி மற்றும் செய்தித்துறை அரசு செயலாளர் திரு. வே. ராஜாராமன் இ.ஆ.ப., தமிழ்வளர்ச்சி இயக்கக இயக்குநர் முனைவர் ந.அருள் ஆகியோர் உடனிருந்தனர். அவர்களோடு அகரமுதலி இயக்கக இயக்குநர் (மு.கூ.பொ.) என்ற முறையில் நானும் உடனிருந்தேன்.

அகரமுதலி இயக்ககத்தில் உள்ள மொழிஞாயிறு தேவநேயப் பாவாணரின் திருவுருவச் சிலைக்கும், திருவுருவப் படத்திற்கும் மாண்புமிகு அமைச்சர் அவர்களும், அரசு செயலாளர் அவர்களும் மாலை அணிவித்தும், மலர் தூவியும் புகழ் வணக்கம் செலுத்தினர்.

அகரமுதலி இயக்ககச் செயற்பாடுகள், வெளியீடுகள், சொற்குவைத் திட்டத்தின் பரவலாக்கம் உள்ளிட்டவை குறித்து ஆய்வு செய்து அவற்றை மேம்படுத்துவது குறித்துக் கலந்தாய்வு நடத்தியதோடு, எதிர்காலத் திட்டங்கள் குறித்தும் மாண்புமிகு அமைச்சர் அவர்கள் கேட்டறிந்தார். மேலும், அகரமுதலி இயக்கக அகராதிகளைக் கல்லூரிகள், பல்கலைக்கழகங்கள், அரசுப் பொது நூலகங்கள் வழியாக மாணவர்களிடம் கொண்டுசேர்ப்பதற்கான நடவடிக்கைகளை மும்முரப்படுத்துமாறு அறிவுறுத்தினார்.




தமிழ்வளர்ச்சித்துறை அலுவலகங்களான தமிழ்வளர்ச்சி இயக்ககம், உலகத்தமிழ்ச் சங்கம், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், தமிழ்ப் பல்கலைக்கழகம் மற்றும் பிற அரசு நிறுவனங்களில் உள்ள விற்பனை மையங்களில் இவ்வியக்கக அகராதிகளைக் காட்சிப்படுத்தி விற்பனை செய்வதற்கும் நடவடிக்கை எடுக்க வேண்டும் என்று தெரிவித்தார்.

கல்லூரிக் கல்வி இயக்ககம் வழியாகத் தமிழ்நாட்டிலுள்ள அனைத்துக் கல்லூரிகளுக்கும் அகரமுதலி இயக்கக அகராதிகளை வழங்குவதற்கும், அரசால் நடத்தப்பெறும் தமிழ்நாடு அரசுப் பணியாளர் தேர்வாணையப் பயிற்சி மையங்கள், அண்ணா மேலாண்மை பயிற்சி மையம் போன்ற இடங்களிலும் இவ்வகராதிகளைப் பயன்பாட்டுக்குக் கொண்டுசேர்க்கவும் ஆவனசெய்யுமாறு குறிப்பிட்டார்.




அகரமுதலி இயக்ககப் பொன்விழா ஆண்டை இந்தாண்டு தமிழ் அகராதியியல் நாள் விழாவோடு இணைத்துச் சிறப்பான முறையில் கொண்டாடவும், இவ்வியக்ககத் தமிழ்க் கலைக்கழகத்தின் அலுவல்சாரா உறுப்பினர்களின் எண்ணிக்கையை 5-இலிருந்து 10ஆக உயர்த்தி அதன் செயற்பாடுகளைப் புத்தாக்கம் செய்யவும், பொன்விழா ஆண்டை முன்னிட்டு அகரமுதலி நூல்களை 50 விழுக்காடு சிறப்புக் கழிவில் விற்பனை செய்யவும், காலத்திற்கேற்ற வகையில் மேம்படுத்தப்பட்ட ஆங்கிலம் – தமிழ் அகராதி, தற்காலத் தமிழ் அகராதி ஆகியவற்றை உருவாக்கி வெளியிடவும், வருங்காலங்களில் இயக்கக வெளியீடுகள் அனைத்திலும் விரைவுத் துலங்கல் குறியீடு (QR Code) இடம்பெற நடவடிக்கை எடுக்கவும் அறிவுறுத்தினார்.

தமிழிலுள்ள 70 விழுக்காடு சொற்களுக்கு வேர்ச்சொல் கண்டறியப்பட்டுள்ளதாகச் சொல்லப்பட்ட நிலையில் அப்பணியை 100 விழுக்காடு நிறைவு செய்யவும் அமைச்சர் அவர்கள் அறிவுறுத்தினார். ஒன்றரை மணி நேரத்திற்கும் மேலாக நடைபெற்ற ஆய்வின்போது, பொன்விழா ஆண்டு கண்டுள்ள அகரமுதலி இயக்ககத்திற்கு அகராதி இருப்புநூல்களைப் பாதுகாப்பாக வைக்கும் வகையில் போதிய இடவசதியுடன் கூடிய நிரந்தரக் கட்டடம் கேட்டும், இயக்ககத்தில் 10ஆண்டுகளுக்கும் மேலாக குறைவான தொகுப்பூதியத்தில் அகராதி உருவாக்க ஆய்வுப்பணிசெய்யும் பணியாளர்களின் ஊதிய உயர்வு கோரியும் இயக்ககத்தின் சார்பில் மாண்புமிகு அமைச்சர் அவர்களிடம் கோரிக்கை வைக்கப்பட்டது.

# பொருள் வரையறைத்திறனில் வெபுசுதரும் பாவாணரும்



முனைவர் இரா.கு.ஆல்துரை
தமிழ்நாட்டரசின் சிறந்த மொழிபெயர்ப்பாளர்
விருதுபெற்றவர்

## நோவா வெபுசுதர்

நோவா வெபுசுதர் (Noah Webster, 1758 –1843) அமெரிக்க ஆங்கில மரபில் எழுந்த அகரமுதலித் துறையில் மிகச்சிறப்பெய்தியவர். ஆங்கில அகரமுதலியின் முன்னோடியான சாமுயெல் சான்சன் (Samuel Johnson) போலில்லாமல் வெபுசுதர் அடிப்படையில் பள்ளி ஆசிரியர். சான்சன் அவர்களும் பள்ளி ஆசிரியராக வேண்டும் என்று முயன்றார். என்றாலும் அத்துறையில் செல்லாமல் ஒரு பெரும் எழுத்தாளராக விளங்கி முதன்முதலில் அகரமுதலி தொகுத்துச் சிறப்பெய்தினார். வெபுசுதர் பள்ளி ஆசிரியர் பணியல்லாத வேறு பணிகளிலும் முயன்றுள்ளார். என்றாலும் அவரது உணர்வுகள் ஆசிரியப் பணியின்மேல் ஆர்வம் காட்டுவனவாக இருந்தன. எவ்வாறாயினும் அமெரிக்க அகரமுதலித்துறை என்ற ஒரு தனிப்பட்ட மரபினை உருவாக்கிய பெருமை இவரைச் சாரும். வாழ்நாளில் பெரும்பகுதியை அகரமுதலிக்காகச் செலவிட்ட இவர் மொழித்தூய்மைப் பேண பேரார்வம் கொண்டவராக இருந்தார். இவர் ஒரு கடும் உழைப்பாளி. இவரது அகரமுதலிப் பணி பல தனித்தன்மைகளைக் கொண்டது; அமெரிக்க ஆங்கில வளர்ச்சிக்குப் பெருமளவில் உதவியது. புகழ்பெற்ற எருதந்துறை ஆங்கில அகரமுதலியின் பதிப்பாசிரியராக விளங்கிய வயவர் சேம்சு முரே (Sir James Murray) இவரை உரிய பொருள் வரையறை தருவதற்கென்று பிறப்பெடுத்தவர் என்று புகழ்ந்துள்ளார்.

## பொருள்வரையறை

"மொழி, ஆயிரக்கணக்கான விலைமதிப்பற்ற, நுட்பமான எண்ணங்கள் காப்பாகப் பதிந்துள்ளதும் அவை காக்கப்பட்டு வருவதுமான கல்போல் இறுகிய நிலையை எய்திய மரப்பிசின்" (Trench 1904:22). நுட்பமான எண்ணங்கள்–கருத்துகள் மொழிச்சொற்களில் பதிந்துள்ளன. இந்நிலையில் சொல்லின் இயல்வரையறை மூலமே சொல்லின் இயல்பான தன்மையை வெளிக்காட்ட வேண்டியுள்ளது.

அகரமுதலிப்பணியில் சொல்லுக்குப் பொருள் வரையறை தருவது நடுவத் தன்மை வாய்ந்தது. இக்கூறினை அகரமுதலியைப் பயன் படுத்துவோருள் பலர் கவனிப்பது இல்லை. ஆனால் இத்துறை வல்லுநர் அகரமுதலியின் இக்கூறுக்கு மிகுந்த இன்றியமையாமை தருகின்றனர். அடிப்படையில் அகரமுதலி என்பது சொல்லும் பொருளும் கொண்டது. உலகவழக்கு இலக்கிய வழக்கு ஆகியவற்றினின்று சொற்களைத் தொகுத்து விடலாம். ஆனால் அவற்றிற்கு உரியவகையில் பொருள் தருவது எளிமையான பணியன்று. பல இடங்களில் ஒருபொருள் பன்மொழிகளைப் பொருள்களாகத் தந்துவிடுகின்றனர். இவ்வாறு பொருள் தருவதைச் சிறந்ததாகக் கருதுவது இல்லை.

## ஒரு பொருள்பன்மொழி

"உண்மையில், ஒரு மொழியில் உள்ள சொல் அம் மொழியில் உள்ள வேறு ஒரு சொல்லுடன் முழுமையாக ஒரு பொருள்பன்மொழியாக, அதாவது எல்லா வகையிலும் ஒத்ததாக இருக்காது; ஒரு பொருள்பன்மொழியாக இருப்பவனவற்றை ஒப்பிடும் போது, ஒன்றைக்காட்டிலும் மற்றொன்று கூடுதல் பொருள் தன்மை கொண்டதாக அல்லது குறைபொருள் தன்மைகொண்டதாக அல்லது வேறுபாட்டுடன் இருக்கும்; இத்தன்மை ஒருபொருள் பன்மொழித் தன்மையை முழுமையானது என்று சொல்வதற்கு இயலாததாக்குகிறது" (Trench 1904:163).

## பொருள் வழுக்கள்

இயல்விளக்கம் அல்லது சொற்பொருள் தரும் பொழுது ஏற்படும் வழுக்களை

குன்றக்கூறல், மிகைபடக் கூறல், வழுப்படக்கூறல் என மூன்றாகப் பிரித்து விளக்குவார் பாவாணர். மேலும் பொருள்வரிசை அமையவேண்டிய நிலையையும் குறிப்பிட்டுள்ளார் அவர். "சொற்களின் பொருள் வரிசை, (1) சொற்பிறப்பியல் முறை (Etymological order), (2) வரலாற்று முறை அல்லது காலமுறை, (Historical or Chronological order) (3) ஏரண முறை (Logical order) என மூவகைப்படும். பண்டை யிலக்கியம் அழியாத (சமற்கிருதம் போன்ற)

மொழிகட்கும், (இந்தி போன்ற) புதிய மொழிகட்கும்தான், சொற்பிறப்பியல் முறையையும் வரலாற்று முறையையும் கையாளமுடியும். தொன்முது பழங்காலத்தில் தோன்றியதும் பண்டையிலக்கியம் முற்றும் அழிந்து போனதுமான தமிழுக்கோ, ஏரண முறையைத்தான் கையாள முடியும்" (பாவாணர், 2009:36).

அகரமுதலியாளரும் தம் விருப்பப்படி பொருள் தர இயலாது. மொழியில் சொல் இடம்பெறும் சூழலைக் கவனித்துதான் பொருள்வரையறை தரவேண்டிய கட்டாயம் இருக்கிறது. ஆகையால் மொழிப் பயன்பாட்டைக் கூர்ந்து கவனிப்போரால் தா ன் சரியான பொருள்வரையறை தர இயலும். இதற்கு அகரமுதலியாளர் குறிப்பிட்ட மொழியில் தேர்ச்சி யுடையவராக இருக்க வேண்டும். இப்பின்னணியில் பார்த்தால் ஒருவர் சொல்லுக்குப் பொருள்வரையறை தருவதில் சிறந்திருந்தார் என்றால் அவர் அம்மொழியில் நல்ல தேர்ச்சி பெற்றவர் என்பது சொல்லாமல் விளங்கும்.

## பாவாணர்

"அகரமுதலிப் பணிக்காகவே இறைவன் என்னைப் படைத்தான். என் நூல்களுள் தலைசிறந்ததும் வேறெவராலும் செய்ய முடியாததும் தமிழின் தலைமையை நிலைநாட்டுவதும் அகரமுதலிப்பணி ஒன்றே. என் ஆராய்ச்சியின் முழுவிளைவும் அஃதே"என்று பாவாணர்(1902–1981)தம் அகரமுதலித்திறனைத் தாமே வெளிப் படுத்தி யுள்ளார். இக்கூற்றினின்று சிறந்த தமிழ் அகரமுதலி உருவாக்கத்தைத் தம் வாழ்நாள் குறிக்கோளாகக் கொண்டு செயல்பட்டு வந்துள்ளதை அறியலாம். அகரமுதலித்திறனில் சிறந்திருந்த இவரிடம் இயல்பாகப் பொருள்வரையறைத் திறன் மேலோங்கி இருந்துள்ளது என்பது சொல்லாமலேயே விளங்குகிறது. வண்ணனை யடிப்படையிலும் வேரடிப்படையிலும் இவரது பொருள்வரையறை அமைந்திருப்பதைக் காணலாம்.

## அவரை

"பெரும்பான்மை வெளிறின பசுமை நிறமாகவும் சிறுபான்மை வெண்மை செம்மை நிறமாகவும் பல்வேறு வடிவிலும் இரு விரலம்(inch)முதல் எண் விரலம் வரை பல்வேறு அளவில் இருப்பதும் பொதுவாக வீட்டுப்புறங்களில் விளைக்கப் படுவதும் இவர்கொடியிலேனும்(climber) படர்கொடியிலேனும் (creeper) சிறுபான்மை குத்துச்செடியிலேனும்(shrub) மாரிக்காலத்திற் காய்ப்பதும் உடல்நலத்திற் கேற்றதும் சுவையுள்ளதும் எல்லோராலும் விரும்பப் படுவதுமான கறிவகைக்காய்." என வரும் வரையறை அவரை என்னும் சொல்லுக்கு முழுமையாக அமைந்திருப்பதைக் காணலாம். அவரை என்பது பலவகைகளை உள்ளடக்கியது; பலநிறங்களிலும் பல வடிவங்களிலும் உள்ளது. இவைபோன்ற அனைத்துத் தன்மைகளையும் உள்ளடக்கும் வகையில் பாவாணரின் இவ்வரையறை திகழ்வதைக் காணலாம்.

இவ்வரையறையைப் படிப்போர் எண்ணத்தில் அவரையைப் பற்றி ஏறக்குறைய முழுமையான கருத்து உருவாவது தவிர்க்க இயலாது. இந்த அளவிற்கு வரையறை தர வேண்டும் என்றால் அவரையைப் பற்றிய செய்தியினை அவர் முழுமையாக உள்வாங்கி யிருக்கவேண்டும் என்பதும் அவர் பயன்படுத்திய தமிழ்மொழியில் நல்ல திறன் பெற்றிருக்க வேண்டும் என்பதும் வெளிப்படை. இதுபோன்று பல சொற்களுக்குப் பல தன்மைகளை உள்ளடக்கியதான பாவாணரின் பொருள்வரையறை உள்ளது என்பது பாவாணரின் பன்முக அறிவைப் பறைசாற்றி நிற்கிறது. அகரமுதலியில் மொழிச்சொற்கள் இடம்பெறும். சொற்களனைத்திற்கும் உரிய பொருளை உரிய வகையில் கொடுக்கவேண்டும். அவ்வகையில் தமிழ்ச் சொற்களனைத் திற்கும் கொடுக்கும் விளக்கம் ஒட்டுமொத்த தமிழ்மொழியின் நிலையைக் காட்டுவதாக இருக்கும். தமிழின் முழுமை அதன் வளத்தையும் பழைமையையும் உள்ளடக்கியது. ஆகையால் தமிழ்ச்சொற்கள்

அனைத்தையும் கூர்ந்தா யும் தம் ஆய்வுக்கு உட்படுத்த திட்டமிட்டிருந்தார் அவர். அதனாலேயே அகரமுதலிப் பணியை எல்லாவற்றிற்கும் மேலாகக் கொண்டிருந்தார்.

பகல்(day) என்னும் சொல்லிற்கு "ஓர் இரவுக்கும் அடுத்த இரவுக்கும் இடைப்பட்ட வெளிச்சம் உடைய நேரம்" (the time of light between one night and the next), வீடு(house) என்பதற்கு " ஒன்று அல்லது சில குடும்பங்களுக்குத் தங்கும் இடமாகச் செயல்படும் ஒரு கட்டடம்" (a building that serves as living quarters for one or a few families) என்பன போன்று மெரிடியம் வெபுசுதர் அகரமுதலி பொருள் வரையறை தந்திருப்பதை அவ்வகர முதலி இயல்வரையறையைச் சிறப்பாகத் தந்திருப்பதற்குச் சான்று காட்டலாம்.

## வேர்

பாவாணர் வாழ்நாள் முழுவதும் வேர்ச்சொல் லாராய்ச்சியில் மூழ்கிக் கிடந்தவர். ஆகையால் வேர் அடிப்படையில் சொல்லுக்கு விளக்கம் தருவது அவருக்கு இயல்பாய் அமைந்த ஒன்று.

அவல் =தட்டையாக இடித்த அரிசி. அவல் – அவலை – அவரை = தட்டையான அல்லது சப்பையான காய்வகை என்று வேர் அடிப்படையில் பொருள் தரும் திறனையும் பாவாணரிடம் காணலாம்.

இதைப்போல் அல்= இரா. அல்– அல்லி =இரா. அல்– அல்லி =இரவில் மலரும் பூவகை. இரவில் மலர்வதால் அல்லி; பகலில் குவிவதால் குமுதம். முதலெழுத்தைச் சார்ந்து வரும் எழுத்து சார்பெழுத்து. என்றாற்போன்று தம் படைப்புகள் நெடுகிலும் வேர் விளங்கும் வகையில் பொருள்வரையறை தந்திருப்பதைக் காணலாம்.

அமெரிக்க ஆங்கில அகரமுதலி மரபில் நோவம் வெபுசுதர் ஒரு தனி இடத்தை உருவாக்கியதுபோல் தமிழ் அகரமுதலி மரபில் பாவாணர் ஒரு தனி இடத்தை உருவாக்கி யுள்ளார். சொல்லாய்வில் ஈடுபடுவோர்க்குப் புதுவதாக வரும் கருத்துகளுக்கும் பொருள்களுக்குமான சொல் படைப்பது இயன்மொழிச் சொற்களின் வழி இயைவது என்னும் உண்மை விளங்கும். அதுவல்லாமல் இயன்மொழிச் சொற்கள் உணர்த்தும் பொருள் தெளிவு கடன்பெறும் சொற்களில் இருக்காது. இவைபோன்ற இயன்மொழிச் சொற்களின் இயல்பை அறிந்ததனாலேயே நோவம் வெபுசுதரும் பாவாணரும் மொழித்தூய்மையில் நாட்டம் செலுத்தி யுள்ளனர் எனலாம்.

ஆசிரியர்பணி மேற்கொண்ட இவ்விரு அறிஞர் பெருமக்களும் நீண்டகாலம் அகர முதலிப்பணியில் ஈடுபட்டிருந்தனர். இவ்விருவரும் கடும் உழைப்பாளிகள். ஆகையால் சொற்களைப் பற்றிய முழு அறிவு இவர்களிடம் நிரம்பி இருந்தது. அகரமுதலி தொகுத்தற்கு வேண்டிய இலக்கண வறிவு, சொல்லாராய்ச்சி, மொழியாராய்ச்சி, சொற்றொகுப்பு, ஆகிய நாற்றிறங்களுடன் விளங்கிய பாவாணரின் பொருள் வரையறைத்திறன் போற்றிப் பாராட்டுதற் குரியது. பாவாணரின் வேர்காணும் திறன் சொற்களுக்கு வேர் அடிப்படையிலும் பொருள்வரையறை தருவதற்கு இடமளித்தது. பாவாணரையும் வெபுசுதரைப்போல் பொருள்வரை யறைக்கென்று பிறப்பெடுத்தவர் என்று குறிப்பது அனைத்து வகையிலும் பொருத்தமே.

ஓர் அகரமுதலியைப் பார்ப்பவர் யாரானாலும் அங்கு எவ்வாறு செய்திகள் ஒருங்கிணைக்கப்பட்டுள்ளன, எங்கிருந்து செய்திகள் வந்துள்ளன, அதைப் பயன்படுத்துவோர் பலருக்கு அது எவ்வாறு பயன்படுகின்றது என்பனவற்றை எண்ணி வியக்காமல் இருக்க இயலாது என்கின்றனர். இவற்றுடன் சொல்லின் இயல்வரையறை உரிய வகையில் அமைந்தால் அது பெருமளவில் சொல்லைப் பற்றிய தெளிவினை உண்டாக்குவதோடு கூடுதல் வியப்பைத் தருவதாக இருக்கும்.

## குறிப்புதவி நூல்கள்

1.பாவாணர், 1985, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி முதன்மடலம் – முதற்பகுதி, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்டம் இயக்ககம், சென்னை

2.பாவாணர், 2009 , சென்னைப்பல்கலைக் கழகத் தமிழ் அகராதியின் சீர்கேடுகள், உலகத் தமிழ் கழகம் (முதற்பதிப்பு1961)

3. Trench, R.C., 1904, The study of Words, Howard Willford Bell, New York

# முட்டாள் முட்டு

இரா. திருமாவளவன்
தேசியத் தலைவர்,
மலேசியத் தமிழ்நெறிக் கழகம், மலேசியா



முட்டாள் எனுஞ் சொல்லைக் கேட்டதும்.. முதலில் நமக்குச் சீற்றமே எழும்பும். நான் யாரையும் வைது இச்சொல்லை இங்குப் பதிவிடவில்லை. இச்சொல் பற்றி ஆராயவே இங்குத் தலைப்பாய்ப் பதிவிட்டேன். எனவே அன்பர்கள் பொறுமையாய்ப் படித்தருள வேண்டுகிறேன்.

உல் எனும் வேர் முளையினின்று பல்வேறு வகையான கருத்துகள் பிறக்கும் என்பது பாவாணர் தெரியியம் சொல்லும் முடிபு.

அவற்றுள் ஒன்று நெருக்கத்தின் பின் நிகழும் சேரல், தொடல், மோதல், கலத்தல் ஆகும். தொடலே மோதலுக்கும், கலத்தலுக்கும் அடிப்படை. வலிந்த தொடலே மோதல். மோதலே முட்டல். இதனைப் பொருந்துதலால் நிகழ்தல் என்றாலும் பொருந்தும்.

உல்>முல்> முள்> முட்டு = மோது

ஒரு பொருள் இன்னொரு பொருளோடு பொருதுதலை மோதுதல், முட்டல் என்பர்.

இரண்டு மாடுகள் ஒன்றோடு ஒன்று தம் மண்டையால் இடித்துக் கொண்டு சண்டையிடுதலும் முட்டிக்கொள்ளுதல் எனப்படும்.

மாடுகள் முட்டிக் கொள்கின்றன என்பர் மக்கள்.

முட்டு என்பது சண்டை, சந்திப்பு, தாங்கு, தடை எனப் பல்வேறு பொருள்களை விரித்துச் சொல்லும்.

இரண்டு பேர் எதிர்பாராத வகையில் சந்தித்தால் இருவரும் முட்டுபட்டனர் என்று கூறுவர். ஈழத்து மக்களிடையே இச்சொல் இவ்வாறு பொருள்கொள்ளப்படுவது வழக்கு.

முட்டுதல் (பெ) 1. எதிர்ப்படுதல்: "ஈடு குலையத் துவசம் வீழ அனிகத்தவரும் ஏக எதிர் முட்டுதலுமே" (வி.பா:30:23). 2. தாக்குதல்: "வந்து எதிர் முட்டுதலும் தன தேரினை மாறுபடத் திருகி" (வி.பா:41:15) ( வில்லி பாரதம்)

தொடர்ந்து செல்லும் ஒரு பொருள் மற்றொரு பொருளோடு எதிர்படுகின்றது என்றால் தொடர்ந்து செல்லும் பொருளின் செல்கை தடுக்கப்படும். எனவே இவ்விடத்தில் முட்டு என்பது தடுத்து

நிறுத்தல் எனும் பொருளையும் வழங்கும். தடுத்து நிறுத்தல் எனும் பொருளில் ஓங்கி வளர்ந்த மரமோ, தூணோ வீழ்ந்து விடாமல் இருக்க தடுத்து நிறுத்தி , தாங்கிப் பிடித்தலும் முட்டு கொடுத்தல் எனச் சொல்லப்பெறும்.

மாந்தன் ஒருவனுக்கு இயல்பாய் வளர வேண்டிய அறிவு தொடர்ந்து வளர்ச்சிப்பெறாமல் தடுக்கப்படுதல் அறிவு முட்டுப்படுதலாகும். இவ்வாறு முட்டுப்பட்டால் அறிவு முடக்கமே நிகழும். அறிவு முட்டுப்பாடே முட்டம் . முட்டமே முட்டாள் ஆகும்.

முள்> முட்டு >முட்டம்= அறிவு முட்டுப்பாடு ( அறிவுக்குறை)
முட்டம்>முட்டன் = அறிவற்றவன், மூடன்
முட்டத்தனம் = மூடத்தனம்
முட்டாட்டம் = முட்டாள் தனம், அறியாமைச் செருக்கு( எதுவும் தெரியாமல் எல்லாம் தெரியும் என்பது)
முட்டாள்= அறிவு முட்டுப்பட்ட மூடன். முட்டு ஆள் என இதனைப் பகுக்கலாம்.

மேலும் பல்வகை இலக்கிய நூல்களிலும் முட்டு பல்வேறு ஈறும் ஒட்டும் பெற்று எவ்வாறு முட்டற விளக்கப்பட்டுள்ளது என்பதை இங்குச் சான்றாய்க் காணலாம்.

முட்டல் > எதிர்தல்: "முட்டல் கிடைத்தல் முடுகல் நேர்தல் ஏற்றல் தலைப்படல் எதிர்தல் ஆகும்" (பிங்கலம்: 7:222).

முட்டலர் > தடைப்படுத்திலர்: "முந்தை தம் முறைமைப் பணி முட்டலர் செய்து வந்தார்" (பெரிய : 988).

முட்டற > தடையின்றி: "கொல் தரு இருப்பு முட்டு முட்டு அறக் கொடு வா என்றான்" (தி.தி:45:8).

முட்டா > 1. குன்றாத: "புண்ணியம் முட்டாத் தண் நிழல் வாழ்க்கை " (பட்:204). 2. குறைவு படாத: "முட்டாச் சிறப்பிற் பட்டினம் பெறினும்" (பட்:218). 3. தவறாமல்: "அவனை முறை காக்கும் முட்டாச் செயின்" (குறள்:55:7). 4. இடையறாத: "முட்டாச் சிறப்பின் மூன்று உள ஆங்கு" (சில :11:97). 5. வழுவாத: "வரு விருந்து ஓம்பி மனை அறம் முட்டாப் பெரு மனைக் கிழத்தியர்" (சில:22:132). 6. தடையில்லாத: "முட்டா முது கரியின் இனம் முது வேய்களை முனிந்து" (சம்:1:14:8).

முட்டாத > 1. தப்பாத: "முட்டாத முச் சந்தி மூவாயிரவர்க்கும் மூர்த்தி என்ன" (வன்:7:90:7). 2. குறைவில்லாத: "முட்டாத இன்பப் புதாத் திறக்குந் தாளுடைய மூர்த்தி பாதம்" (சீவ:6:138).

முட்டாது > 1. முட்டுப் படாதவாறு: "நெடு வெண் நெல்லின் அரிசி முட்டாது" (மலை : 564) 2. குறைபாடில்லாமல்: "நட்டோர் உவப்ப நடைப் பரிகாரம் முட்டாது கொடுத்த முனை விளங்கு தடக் கை"(சிறு :105). 3. இடையறவு படாது:

"விட்டுக் கருமம் செய வைத்த பின்னரும் முட்டாது அவரை" (பழ :279). 4. தப்பாமல்: "அன்றில் முட்டாது அடையுஞ் சோலை ஆரூரகத்தீரே" (வன்:7:95:3).

முட்டாமை > குறையாமை: "எட்டுத் திசைக் கண்ணும் ஓரொன்றே ஈனமா முட்டாமை" ( சீவசம் )

முட்டினர் (5வி) 1. தாக்கினர்: "கீழை வாயிலிற் கிட்டலும் முட்டினர்" (யுத்:15:56). 2. நெருங்கினார்கள்: "அடுத்தனர் அகல நின்று நின்று ஓர் இமைப்பின் முட்டினர்" (வி.பா:45:147).

முட்டு > 1. குறைவு: "மூவேழ் துறையும் முட்டு இன்று போகிய உரை சால் சிறப்பின்" (புற :166:8).
2.தடை: "மொழியாததனை முட்டு இன்றி முடித்தல்"(தொல்:27:112).3. இடையூறு: "முட்டு உற்ற போழ்தில்முடுகி என்" (நால்:24:8). 4. சங்கடம்: "முட்டுஆற்றுப்பட்டு முயன்று உள் ஊர் வாழ்தலின்" (நால்:29:8).
5.இடையீடு: "முட்டு இன்றி இரு போதும் முனியாது எழுந்து அன்பு பட்ட மனத்தார்கள்" (சம்:1:86:1).
6. குற்றம்: 'முட்டு ஆறா அடி ஏத்த முயல்பவர்க்கு" (நாவு: 5:75:2).
7. கண்டு முட்டுக் கேட்டு முட்டு முதலிய தீட்டுக்கள்: "கண்டு முட்டு அடிகள்மார்கள் கேட்டு முட்டு யானும்" (பெரிய:2595).
8. கருவி: "கொல் தரும் இருப்பு முட்டு முட்டு அறக் கொடு வா என்றான்" (தி.தி:45:8)

முட்டுப்பாடு > 1. தட்டுப்பாடு: "நெட்டிருங் கூந்தற் கடவுளர் எல்லார்க்கும் முட்டுப்பாடு ஆகலும் உண்டு" (கலி: 93:36). 2. தீது: "அந்தராயம் தீங்கு அலாபம் முட்டுப்பாடு அந்தரம்" (நிக.தி:8:127).

முட்டுவர் (பெ) தாக்குவார்கள்: "மொத்துவர் சினத்தொடு எதிர் முட்டுவர் சிரத்தால்" (வி.பா:37:18).

முட்டுவன (5வி) 1. தாக்குவன: "ஊரும் பகல் தேரை முட்டுவன கட்டுவன" (ஒட்:5:76). 2. தொடுவன: "வன் கொண்டல் விட்டு மதி முட்டுவன மாடம்" (சுந்:2:1).

முட்டுப்பட்ட அறிவு , தட்டுப்பட்டுத் தடையாகி முடங்கியமையால் முட்டாள்களை ஆக்கியது. முட்டாள் தனம் முட்டுப்பட முட்டுகளை அகற்றி அஃகி அகன்ற அறிவு கொள்வோம். சிந்தனைக்கு முன்னிடம் வழங்கி மெய்ப்பொருள் அறிவோமாக. வெல்க அறிவுப் புரட்சி.

# புக்கிலும் துச்சிலும்

முனைவர் ஆ. அரிமாப் பாமகன்
மேனாள் ஆங்கில விரிவுரையாளர்
புதுச்சேரி



"கல்யாணம் ஆனவரே சௌக்யமா – உங்கள்
கண்ணான பெண்மணியும் சௌக்யமா..

புதிய வீட்டின் கதவுகளைத் திறந்து வைத்தேனே – அதில்
பொய்யுரைத்து வாடகைக்குக் குடிபுகுந்தீரே – இன்று
இதய வீட்டின் கதவுகளைத் திறந்து வைப்போமா – நாம் இருவருமே ஒருவராகிக் குடியிருப்போமா
(படம்: குமுதம், கண்ணதாசன்)

1) குடவோலைச் சீட்டு எழுதி மாத வாடகைக்கு வீடு விடுவது வழக்கம். (வாழ் + தகை = வாடகை). அந்தக்காலத்துப் பள்ளிகளில் அந்தக்காலத்துத் தமிழாசிரியர்கள் அந்தக்காலத்து மாணவர்களுக்குக் குடவோலைச் சீட்டு எழுதப் பயிற்சி தந்தனர்.

2) குறிப்பிட்ட தொகையைக் கொடுத்துப் பணத்துக்கு வட்டி இல்லை, வீட்டுக்கு வாடகை இல்லை என வீடு விடுவார்கள். இது ஒற்றிக்கு விடுதல் எனப்பட்டது. பின்னர் இது 'போக்யத்துக்கு' விடுதல் என்று வடமொழி ஆயிற்று.
(இறைவன் போக்தா எனவும், அன்பர்கள் போக்யம் எனவும் சித்தாந்திகள் கூறுவர்)

"புக்கில் அமைந்தின்று கொல்லோ உடம்பினுள்
துச்சில் இருந்த உயிர்க்கு."
(திருக்குறள்)
பொருள்: உடம்பிற்குள் ஒதுங்கி இருந்த உயிருக்கு நிலையான இருப்பிடம் இன்னும் அமையவில்லை போலும்!

உடம்பினுள் ஒண்டிக் குடித்தனம் (துச்சில்) செய்கிறதாம் உயிர், அதற்கு நிலையான வீடு (புக்கில்) இன்னும் கிடைக்கவில்லையாம்!

{இந்த உலகம் அடுத்த தலைமுறைக்குச் சொந்தமானது; நாம் சிறிது காலம் தங்கிப் போக வந்துள்ளோம். இயற்கை வளங்கள் கெடாமல் அடுத்த தலைமுறையிடம் ஒப்படைப்போம்}

புகு + இல் = புக்கில்.
சொந்த வீடு, நிலையான இருப்பிடம்.
புதுமனை புகுவிழா.
(புகு + அகம் = புக்ககம், புக்காத்துக்குப் போயிருக்கா..)

பல பொருட்களைத் தொகுத்து அறைப்பது தொகையல் என்பர், துவைத்து அறைப்பது துவையல் என்பர். இப்படித் தொகுத்துச் சுவைபட அறைக்கும் சாந்து 'தொகு' > 'தொக்கு' என்றும் கூறப்படும்.

'துகள்அறு கேள்வி உயர்ந்தோர் புக்கில்'
(புறநானூறு – 221)

'புலவர் புக்கில் ஆகி' (புறநானூறு – 375)

புரவலர்களை நாடிச்செல்லும் புலவர்கள் நிலையாகத் தங்கலாம் என்னும் பொருளில் அவர்களுக்கு வழங்கப்படும் இருப்பிடங்களைப் 'புக்கில்' என்றனர்.

' துச்சில் இருந்த உயிர்க்கு'
துச்சில் – ஒதுங்கும் இடம், ஒண்டிக் குடித்தனம்.
உயிர் தங்கிப் போகக் கிடைத்த இடம்.
சிலம்பு + அதிகாரம் = சிலப்பதிகாரம்
சாந்து + அம்மி = சாத்தம்மி
துஞ்சு + இல் = துச்சில்
தூங்குவதற்கான வீடு.

'மாச்செய்த குரம்பை தன்னை மண்ணிடை மயக்க மெய்து
நாச்செய்த நாலு மைந்து நல்லன...'

(திருநாவுக்கரசர் தேவாரம்)
நாலும் ஐந்தும் – ஆக, ஒன்பது வாயில்களுடையது, ஐம்பூதங்களால் ஆனது இவ் வுடம்பாகிய குரம்பை (வீடு).

குரம்பை – குடில் > cottge
குடில் செய் – குடிசை > hut
நன்செய் – நஞ்சை
புன்செய் – பஞ்சை
தண்செய் – தஞ்சை

"பிச்சிலேன் பிறவி தன்னைப் பேதையேன் பிணக்க மென்னும்
துச்சுளே யழுந்தி வீழ்ந்து துயரமே யிடும்பை தன்னுள்
அச்சனா யாதி மூர்த்திக் கன்பனாய் வாழ மாட்டாக்
கொச்சையேன் செய்வ தென்னே கோவல்வீ ரட்ட னீரே."
(திருநாவுக்கரசர் தேவாரம்)

துச்சுளே – துச்சு உள்ளே
[துன்று + இல் = துன்றில் > துற்றில் > துச்சில்.
உள் ஈறு பெற்றுத் துச்சுள் – துய்த்துள் என்பதன் மரூஉ.
'துய்ப்பார்க்குத் துப்பாய துய்ப்பாக்கி' என்பது 'துப்பார்க்குத் துப்பாய துப்பாக்கி' என்று மருவி வந்ததைப் போல – குறிப்புரை: மதுரகவி முத்து சு. மாணிக்கவாசகர்]

'துணையொடு துச்சில் இருக்கும் கொல்லோ'
(புறநானூறு – 321)

'செல்விருந்து ஆற்றித் துச்சில் இருத்த'
(அகநானூறு – 203)

' தூதுஉண் அம் புறவொடு துச்சில் சேக்கும்'
(பட்டினப்பாலை)
அல்குதல், சேக்குதல் – இராத் தங்குதல்.

சிறிது காலம்
தங்கிப் போகும் இடம் – துச்சில்.

Rest house, guest house, tourist home என்பவற்றிற்குத் 'துச்சில்' (= துஞ்சு + இல் – பொருத்தமாகத் தோன்றினும் cottage, homestay என்பவற்றுக்கு மிகப் பொருத்தமாகத் தோன்றுகின்றது.

தூக்கத்துக்கு 'உ' – வேராக இருக்குமோ?
உ – உறங்கு – துஞ்சு – துயில் – தூக்கம் > dormir (French, Spanish, Portuguese, Romanian) – dormitory (English)

துச்சில் – தங்கும் குடில் > cot > cottage.

1) cottage (n.)
late 14c., "a cot, a humble habitation," as of a farm-laborer, from Old French cote "hut, cottage" + Anglo-French suffix -age (according to OED the whole probably denotes "the entire property attached to a cote"). Old French cot is probably from Old Norse kot "hut," cognate of Old English cot, cote "cottage, hut," from Proto-Germanic *kutan (source also of Middle Dutch cot, Dutch kot)

2) cot (n.1)
"small, light bed," 1630s, from Hindi khat "couch, hammock," from Sanskrit khatva, probably from a Dravidian source (compare Tamil kattil "bedstead").

3) dormitory (n.)
mid-15c., "place, building, or room to sleep in," originally of a monastery or nunnery, from Latin dormitorium "sleeping place," from dormire "to sleep" (see dormant). From the vernacular Old French form dortor Middle English had the word earlier as dortour (c. 1300). Old English had slæpern "dormitory," with ending as in barn. As "residence hall of a college or university" by 1718.

*****

# மகரக்கட்டு/ கீச்சுக்குரல் மருத்துவத்தில் அண்ணாக்கின் செயல்பாடு





ஆசிரியர் : மரு. முத்தையா குமரேசன் M.S. (ENT), DLO
உதவி ஆசிரியர் : மரு. கு. நவீன் பாரத் MB,BS, M.S. (ENT)

'சிவா'
காது மூக்கு தொண்டை மருத்துவமனை .
159, அவ்வை சண்முகம் சாலை, இராயப்பேட்டை, சென்னை

## நாம் கையாண்ட மருத்துவ புது ஆய்வு

பேச்சின் சுருதியைக் குறைத்து, மகரக்கட்டு/ கீச்சுக்குரல் மருத்துவத்தில் பெண் குரல், ஆண் குரலாக உருவாக, அண்ணாக்கு ஒலியை முதன்மை ஒலியாக மாற்றுகிறோம். பேச்சுக்கான துணை உறுப்பு அண்ணாக்கு எனவும் அதன் முக்கியத்துவம் தமிழின் பழைய இலக்கியங்கள் துணையோடு உறுதி செய்கிறோம். அகழ்வாராய்ச்சியின் துணை கொண்டு மட்டுமல்ல, சொல்லாராய்ச்சியின் துணையோடும் ஒரு இனத்தின் வரலாற்றை மீட்டெடுக்க முடியும் என்பதை இனி உலகிற்கு எடுத்துச் சொல்வோம். பண்டைய தமிழர்கள் சிறந்த அறிவாளிகள், அவர்கள் செய்த எண்ணற்ற அறிவியல் கண்டுபிடிப்பை நவீன ஆய்விற்குத் துணையாகவும் மூலக்கருத்தாகவும் எடுத்துரைக்க முடியும்.

அண்ணாக்கு ஒரு பேச்சு உறுப்பு. சில பேச்சு ஒலிகளை உருவாக்க அண்ணாக்குப் பயன்படுத்துகிறது . தமிழ், பிரெஞ்சு, ஜெர்மன், ஹீப்ரு அல்லது ஃபார்ஸி மொழியில் பேச்சு உறுப்பாகவும் கருதப்படுகிறது. அண்ணாக்கு என்னும் பேச்சு உறுப்பு பற்றி அதிகம் சிந்திக்காமல் இருக்கிறோம். பேச்சு ஒலிகளை உருவாக்க மனிதன் ஒலியை உச்சரிப்பதில் அண்ணாக்கு முக்கிய பங்கு வகிக்கிறது.

I. சொந்த அனுபவங்கள் மற்றும் அறிவியல் நடைமுறை ஆரம்பச் செயற்பாடு

II. அவதானிப்புகளின் வழக்கில் ஆராய்ந்து அடிப்படையில் பதில்

III. எனது அறிவியல் முறைமையானது, கருதுகோள் (hypothesis) ஒன்றை ஒருங்கமைத்து ஆராய்தல்

IV. மகரக்கட்டு/ கீச்சுக்குரல் மருத்துவத்தில் நமது ஆய்வு

## I.சொந்த அனுபவங்கள் மற்றும் அறிவியல் நடைமுறை ஆரம்பச் செயற்பாடு

மனிதனின் இயல்பான பேச்சு நுரையீரலில் இருந்து உருவாகும் காற்று சார்ந்தது, நுரையீரலில் இருந்து வரும் காற்று அழுத்தத்தால் குரல்வளையில் உள்ள குரல் நாண் ஒலிப்பை உருவாக்குகிறது. குரல் ஒலி துவக்கம் என்பது மூடிய குரல் நாண்கள் வழியாகக் காற்று செல்லும்போது ஏற்படும் ஒலியால் ஆகும். குரல் நாண் அதிர்வு சத்தத்தைக் குரல் நாண்களாக ஆக்குகிறது. பேசும்போது இறுக்கி மற்றும் ஓய்வெடுப்பதன் மூலம், குரல் நாண்கள் நுரையீரலில் இருந்து வெளியேற்றப்படும் சுவாச ஓட்டத்தை மாற்றியமைகத்து வெவ்வேறு ஒலி பிறக்கிறது.

குரல் நாண் அதிர்வு அகநோக்கியியல்– படம் 1, 2, 3, 4

படம் 1, படம் 2, படம் 3, படம் 4



இவ்வாறு காற்றின் ஓட்டம் ஒரு சுழற்சிக்கு ஒருமுறை குறைந்த, கூடுதல் அழுத்த நிகழ்வுகள் ஏற்படுகின்றன, அவை ஒலியாகப் பரவுகின்றன.எவ்வாறாயினும், குரல்வளை பேச்சில் நுரையீரல் மற்றும் குரல் நாண் ஒலிப்பப் பயன்படுத்தாமல் மனிதர்கள் வார்த்தைகளை உச்சரிக்க முடியும், குறுகிய அதிர்வு திசு இருக்கும் குரல் பாதையில் எந்த இடத்திலும் குரல் ஒலி துவக்கம் ஏற்படலாம். அவற்றில் மூன்று வகைகள் உள்ளன: உணவுக்குழாய் பேச்சு, தொண்டை பேச்சு மற்றும் வாய் பேச்சு ஒலிப்பு.

நுரையீரல் வெளியேறும் காற்று ஓட்டம், மேல் – குரல்வளை குரல் பாதையில் மீண்டும் அதிர்வுகளை உருவாக்கலாம். ஒரு குறுகல் குரல் பாதையில் காற்று வீசப்பட்டால் படம் 5,6,7,8, மீண்டும் மீண்டும் அதிர்வுகளை உருவாக்கலாம்.

படம் 5 படம் 6 படம்7 படம்8









### ஒலி எழுத்து/ வார்த்தை வடிவமைத்தல்

குரல் பாதையில் ஒரு ஒலி உருவாக்கப்பட்டால், அது ஒலி உதடுகள்/நாசிக்கு இடையே நீட்டிக்கப்படும் குரல் பாதை குழாய் வழியாகச் செல்ல வேண்டும். இந்த குழாயின் அளவு மற்றும் வடிவம் வெளிப்படும் ஒலியின் நிலையைப் பாதிக்கலாம். இது ஒலியின் நிலையைக் கையாள நமக்கு மேலும் வாய்ப்பளிக்கிறது. பல வேறுபட்ட தசை இயக்க முறைகளால் ஒலியின் நிலையைக் கட்டுப்படுத்த முடியும்,

### குரல் சத்தம் உருவாகும் இடம்:

1. குரல்வளை பேச்சில் சத்தம் உருவாகும் இடம் அறிதல்
தொண்டையில் கையை வைத்து மெதுவாக ஒலி எழுப்பப்படுகிறதா இல்லையா என்பதை அறியலாம்.
2. அண்ணாக்கு பேச்சில் சத்தம் உருவாகும் இடம் அறிதல்
அண்ணாக்கு பேச்சில் சத்தம் உருவாக்கி காற்று ஓட்டத்தை மாற்றியமைக்கிறது, அப்போது நீங்கள் காது அல்லது தலையில் ஓர் அதிர்வை உணர முடியும்.
உயிர்களின் முதன்மை ஆதாரமாக காற்று இருப்பதால், இந்தக் காற்றை மட்டுமே பயன்படுத்தி பேச்சு ஒலி உருவாக்கப்படுகின்றன. இது குரல் பாதை மற்றும் வாயால் வெவ்வேறு உயிரெழுத்துகள், மெய் எழுத்து மற்றும் உயிர் மெய் எழுத்துகளாக மாற்றப்படுகின்றன.

#### உயிரெழுத்து ஒலிப்பு

1.உயிருக்கு முதன்மையானது காற்று என்பதால் காற்றை மட்டும் பயன்படுத்தி ஏற்படும் இவ்வொலிகளை உயிர் எழுத்துகள்.
அ, ஆ, இ, ஈ, உ, ஊ, எ, ஏ, ஐ, ஒ, ஓ, ஔ (உயிர் எழுத்துகள்)
நாக்கு, வாயின் மேல் அண்ணம் மற்றும் அண்ணாக்கு உதவியால் மட்டுமே ஏற்படும் ஒலி.*,
2.மெய்யெழுத்துகள் முழுமையான அல்லது பகுதியளவு சுருங்கிய குரல் நாண் ஒலிப்பை உருவாக்குகின்றன.
க், ங், ச், ஞ் ட், ண், த், ந், ப், ம், ய், ர், ல், வ், ழ், ள், ற், ன் (மெய் எழுத்துகள்), நாக்கு வாயின் மேல் அண்ணத்தைத் தொடும். இவ்வொலிகளை ஏற்படுத்தும் போது காற்றின் பங்கை விட உடலின் பங்கு அதிகம் என்பதால், இவற்றுக்கு மெய்யொலிகள் என்று பெயர் சூட்டப்பட்டது.
3. உயிர்–மெய் எழுத்துகள் (Life–Body Letters ): uyir–mey ezuththukkaL) உயிர் எழுத்துக்கள் மற்றும் உடல் எழுத்துகளை இணைப்பதன் மூலம் உருவாகின்றன.
தமிழ் மொழியில் உயிர் எழுத்துகள் அண்ணாக்கு மூலம் உருவாக்கப்படுகின்றன: மெய்எழுத்துகள் குரல் நாண்களால் உருவாக்கப்படுகின்றன: இவ்வாறு பன்னிரண்டு உயிர் எழுத்துக்களும் பதினெட்டு மெய் எழுத்துகளுடன் சேர்வதால் (18 X 12) 216 உயிர் மெய் எழுத்துகள் பிறக்கின்றன. எனவே, இப்போது இது குரல் நாண்கள் மற்றும் அண்ணாக்கு குரல் ஒலியின் கலவையாகும்.

### II. அவதானிப்புகளின் (ஆராய்ந்து– குமரி மாவட்டச்சொல்) அடிப்படையில் பதில்

1886 ஆம் ஆண்டில், பிரெஞ்சு மொழியியலாளர் பால் பாஸ்ஸி தலைமையிலான பிரெஞ்சு மற்றும் ஆங்கில மொழி ஆசிரியர்களின் குழு, சர்வதேச ஒலிப்பு சங்கம்(ஐபிஏ) உருவாக்கப்பட்டது. 1888 இல் உருவாக்கப்பட்ட சர்வதேச ஒலிப்பு சங்கம் அனைத்து மொழிகளுக்கும் பொருந்தக்கூடிய பொதுவான உச்சரிப்புகளைக் கண்டறிந்து உச்சரிப்புகளைக் கையாள விரும்பியது. துரதிர்ஷ்டவசமாக இது ஆங்கிலம் தவிர மற்ற மொழிகளில் உள்ள அகராதிகளில் சர்வதேச ஒலிப்பு சங்கம் உருவாக்கிய வார்த்தை ஒலிப்பு உலகளாவியது அல்ல. இது தமிழ் மொழி உச்சரிப்புகளின் தனித்துவமான முன்னோக்குகளை இழக்கத் தூண்டியதாயிற்று. தமிழ் போன்ற பழங்கால அனைத்து மொழிகளும் அதிகம் பாதிக்கப்பட்டன.

மேலும் ஆங்கிலக் கற்பித்தல் முறைகளும் பாடத்திட்டங்களும் பண்டைய மொழிகளின் உச்சரிப்புகளையும் அழகையும் கெடுத்துவிட்டன.

சர்வதேச ஒலிப்பு சங்கம் உருவாக்கிய வார்த்தை ஒலிப்பு உலகளாவியது அல்ல. இது தமிழ் மொழி வேலை. சர்வதேச ஒலிப்பு சங்கம் உருவாக்கிய வார்த்தை ஒலிப்பு (ஐபிஏ) முடிவு அல்ல.
அண்ணாக்கு பேச்சு ஒலிப்பு– எம்ஆர் ஐ (காந்த அதிர்வு இமேஜிங்) ஸ்கேன் படம் 11,12, (ஒலியலைகளை உபயோகித்து படங்கள் மூலம் நோயைக் கண்டறியும் தொழில் நுட்பமாகும் ) மற்றும் அகநோக்கியியல் படம் 13,14(endoscopy)

படம் 11 ₹ படம் 12







படம் 13 படம் 14





மனிதன் பேசும் பொது குரல் நாண் அசைவதை விட அண்ணாக்கு அதிகம் அசையும் அண்ணாக்கு
படம் 15




தமிழில் ஒலிப்பு சின்னத்தின் படம் (Image of Phonetic symbol in Tamil) படம் 15

III, எனது அறிவியல் முறைமையானது கருதுகோள் ஒன்றை ஒருங்கமைத்து ஆராய்தல்

பழந்தமிழ் இலக்கியங்களை மையமாக வைத்து மகரக்கட்டு/ கீச்சுக்குரல் (PUBERPHONIA) ஆய்வு.

அ. அண்ணாக்கின் செயல்பாட்டைக் குறிப்பிடும் தமிழ் காப்பியங்கள் குறிப்பிடத்தக்கது. தொல்காப்பியர், திருமூலர், அகத்தியர் மற்றும் இடைக்காட்டுச் சித்தர் ஆகியோரின் பழைய இலக்கியங்கள்.
ஆ. அண்ணாக்கின் பேச்சு நிவாரணம் செயல்பாடு ஔவையர் அகவலில் தெளிவாகக் கொடுக்கப்பட்டுள்ளது.

தமிழ் இலக்கணமான தொல்காப்பியம் ஒலியியலை விளக்குகிறது.

"உந்தி முதலா முந்து வளி தோன்றி,
தலையினும் மிடற்றினும் நெஞ்சினும் நிலைஇ,
பல்லும் இதழும் நாவும் மூக்கும்
அண்ணமும் உளப்பட எண்முறை நிலையான்" (தொல்.எழுத்து.83)

தொல்காப்பியர் வளைவில் தமிழ்ப் பெரும் புலவர் அதங்கோட்டாசானின் திருவுருவம் உள்ளது. காப்பிகாடு, கன்னியாகுமரி மாவட்டம். படம் 9,10

படம் 9




படம் 10



தமிழ் இலக்கியத்தில் கீழே குறிப்பிடப்பட்டுள்ள தமிழ் எழுத்துகள் உருவாக்கும் வரிசை கொடுக்கப்பட்டுள்ளது.

உயிர் எழுத்துகள் பன்னிரண்டும் கழுத்தை இடமாகக் கொண்டு பிறக்கின்றன. வல்லின மெய் எழுத்துகள் ஆறும் மார்பை இடமாகக் கொண்டு பிறக்கின்றன. மெல்லின மெய் எழுத்துகள் ஆறும் மூக்கை இடமாகக் கொண்டு பிறக்கின்றன. இடையின மெய் எழுத்துகள் ஆறும் கழுத்தை இடமாகக் கொண்டு பிறக்கின்றன.

இதில் என் கருத்துகள் வேறு. தயவு செய்து கழுத்து என்று சொல்லாதீர்கள். குரல்வளை தொண்டையிலிருந்து வேறுபட்டது. குரல் நாண்கள் மற்றும் அண்ணாக்கு வேறுபட்டவை. தமிழ் இலக்கியத்தில் குரல் நாண்களை விட அண்ணாக்கு அதிக முக்கியத்துவம் கொடுக்கப்படுகிறது. இது முற்றிலும் சரியானது.

"கண்ணாக்கு மூக்கு செவி ஞானக் கூட்டத்துட்

பண்ணாக்கி நின்ற பழம் பொருள் ஒன்று உண்டு

அண்ணாக்கின் உள்ளே அகண்ட ஒளிகாட்டி

புண்ணாக்கி நம்மைப் பிழைப்பித்த வாறே"

–திருமந்திரம்

"எட்ட எட்ட எட்டாதது
கிட்ட கிட்ட கிட்டாதது
நிட்ட நிட்ட நிட்டாதது
அண்ணாக்குச் சுவை
சொட்டச் சொட்ட சுட்டாதது"

அண்ணாக்கில் இருந்துவெளியே தெய்வீக சக்தியாகிய (ஜீவசக்தி) வாயு வரும்பொழுது பேச்சாகிய சப்தம் உண்டாகும் என்று அகத்திய கிரந்தங்கள் உரைக்கின்றன.

இடைக்காட்டுச் சித்தர் பாடல் வரிகள்
"அண்ணாக்கை யூடே அமுதுண்ணேன்
மெய்ஞானம் ஒன்றன்றி வேறே ஒன்றை நண்ணேன்"

இது தொண்டையின் பின்புறம், அண்ணம் மற்றும் நுரையீரலில் இருந்து வரும் காற்று ஆகியவற்றுடன் அண்ணாக்கு இணைந்து பல பிற ஒலிகளை உருவாக்குகிறது.

ஆ.        அண்ணாக்கின் பேச்சு நிவாரணம் செயல் பாடு

ஔவையர் அகவலில் தவறான குரலுக்கு காலால் (காற்று மற்றும்  வளி)
பேச்சு நிவாரணம் கூறியுள்ளார்.

"பேறா நிறுத்திப் பேச்சுரை யறுத்தே" –  குறைபாட்டிற்கு

"மூன்றுமண் டலத்தின் முட்டிய தூணின்
நான்றெழு பாம்பின் நாவில் உணர்த்தி
காலால் எழுப்பும் கருத்தறி வித்தே"– பேச்சு நிவாரணம் கூறியுள்ளார்.

## மகரக்கட்டு /கீச்சுக்குரல் மருத்துவத்தில் நமது ஆய்வு

மகரக்கட்டு/ கீச்சுக்குரல் (PUBERPHONIA) எவ்வித அறுவை மற்றும் மருந்துகள் இல்லாமல் மருத்துவம்.
1470 கீச்சுக்குரல் ஆண்களுக்கு கீச்சுக்குரலை மாற்றி தேவையான குரலைக் கொடுத்துள்ளோம். அண்ணாக்கு அதிர்வு மூலம் ஐந்து நாள்களில் கீச்சுக்குரலை முழுமையாக சரிசெய்கிறோம். அவர்களது குரலும் ஆண்மைத்தன்மை அடைகிறது. வாழ்க்கையிலும் மாற்றம் ஏற்ப்பட்டு நிரந்தர நன்மை அடைகிறார்கள்.
பருவமடையும் சிறுவர்களை அவர்களின் குரலின் தொனியைக் கேட்டு அடையாளம் காணவும், மகரக்கட்டு குரலைக் கண்டறியவும்  மற்றும் நோயாளியின் நம்பிக்கையைப் பெறவும் குரல் சுருதி பகுப்பாய்வு பதிவு செய்கிறோம்.




## மகரக்கட்டுக் குரல் தரம்

1. செவிக்குப் புலப்படாத குரல் : 27%
2. குரல் சோர்வு: 22%
3. குழந்தை குரல்: 11%
4. பெண் குரல்: 10%
5. இரட்டைக் குரல்: 9%
6. நாசி குரல்: 7%
7. வலுவான/ ஆற்றல்மிக்க    குரல் இல்லை: 7%
8. உயர்ந்த குரல்: 5%
9. குரல் கரகரப்பு: 1%
10. மூச்சுத்திணறல் குரல்: 1%

## முந்தைய மகரக்கட்டு/ கீச்சுக்குரல் (PUBERPHONIA)  சிகிச்சைகள்

பெரும்பாலும் குரல் பயிற்சிகள் பேச்சு சிகிச்சையாளர்களால் ( Speech Therapist) சிகிச்சையளிக்கப்படுகிறது. சிகிச்சையின் காலம் பொதுவாக பல வாரங்கள் ஆகும். சில சந்தர்ப்பங்களில் குரல் சிகிச்சை பயனற்றதாக இருக்கும்போது, அறுவை சிகிச்சை கருதப்படுகின்றன. அதனால் பலர் திருப்தி அடையாமல் சிகிச்சையை விட்டுவிடுகிறார்கள். கீச்சுக்குரல் ஓர் பிறவிக் குறைபாடு, சரி செய்ய முடியாது என்ற முடிவிற்கு வந்து விடுகிறார்கள்.  நமது புதிய ஆய்வு மூலம் அண்ணாக்கு ஒலியை முதன்மை ஒலியாக மாற்றி மகரக்கட்டு/ பெண் குரலை ஆண் குரலாக்குகிறோம்.

"தமிழ் மொழி பேசவும் எளிது. தமிழ்ச் சொகளில் 100 சொற்களை எடுத்து வைத்துக்கொண்டு ஓங்வொரு சொல்லாக ஒலித்துப் பாருங்கள். அவை ஒவ்வொன்றும் : மேல் உதடு, கீழ் உதடு, மேற்பல், கீழ்ப்பல், நுனிநாக்கு, அடிநாக்கு, நடுநாக்கு, அண்ணாக்கு, உண்ணாக்குக் கொண்டே. ஒலிப்பதாக இருக்கும். தொண்டைக்குக் கீழே வேலையே யிராது". முத்தமிழ்க்காவலர், சுலைமாமணி, டாக்டர். கி. ஆ. பெ. விசுவநாதம் டி. லிட்,  "தமிழின் சிறப்பு" என்ற நூலில் 1969, அன்றே கூறினார். நாம் இன்று பல  புதிய ஆய்வுகள் செய்து, பேசும் போது குரல் நாணை அதிகம் பாவிக்காமல் அண்ணாக்கை அதிகம் பயன்படுத்துங்கள் என்று மருத்துவரீதியாக மகரக்கட்டு/ கீச்சுக்குரல் (PUBERPHONIA) சிகிச்சைக்குப் பயிற்சிக்கொடுக்கிறோம். பழந்தமிழ் இலக்கியங்களை மையமாக வைத்துப் பல  புதிய ஆய்வுகள் கண்டு உலகம் மேன்மேலும் புதிய  சிறப்புகளையும், பேறுகளையும் பெற்று ஓங்கி வளர்வதாக.

# சங்க இலக்கியத்தில் யாஅம்




முனைவர் பி. பாலசுப்பிரமணியன்

உதவிப் பேராசிரியர்
தமிழ் முதுகலை (ம) ஆய்வுத்துறை
மருதர் கேசரி ஜெயின் மகளிர் கல்லூரி
வாணியம்பாடி.


சங்க இலக்கியம் காலங்கடந்து தொடர்ந்து புதியநோக்கில் வாசிக்கப்பட்டுக் கொண்டே இருப்பதற்குக் காரணம் அதன் பாடற் பொருண்மைகள். தலைவன், தலைவி எனப் பொதுமையாகப் பாடல்கள் அமைந்துள்ளதால் சங்கக் கவிதைகள் எல்லோருக்குமானதாகக் கொண்டாடப்படுகிறது. திணையை மையமிட்டுப் பாடல்கள் தொகுக்கப்பட்டுள்ளதால் முதற், கரு, உரிப்பொருள் நோக்கிப் பாடல்களைப் புரிந்து கொள்ள முயற்சிக்கிறோம். தொகைப் பாடல்கள் இயற்றப்பட்ட காலத்தில் இருந்த இயற்கை சூழமைவுகளான மரம், செடி, கொடி போன்ற தாவரங்கள், விலங்குகள் போன்றவை பதிவு செய்யப்பட்டுள்ளன. அதனடிப்படையில் சங்க இலக்கியப் பாடல்களில் இடம்பெற்றுள்ள யாஅம் (யா மரம்) குறித்து இக்கட்டுரை விவாதிக்கிறது.

## யாஅம் விளக்கம்

'யாஅம்' என்ற சொல் சங்க இலக்கியத்தில் நற்றிணையில் 186 ஆம் பாடலிலும் குறுந்தொகையில் 14, 37, 198, 307, 366 ஆகிய ஐந்து பாடல்களிலும் ஐங்குறுநூற்றில் 333 ஆம் பாடலிலும் கலித்தொகையில் 145 ஆம் பாடலிலும் அகநானூற்றில் 59 ஆம் பாடலிலும் பரிபாடலில் 5 ஆம் பாடலிலும் என பத்துப் பாடல்களில் இடம்பெற்றுள்ளது.

'யாஅம்' என்ற சொல்லுக்கு இரு பொருள்கள் வழங்கப்படுகின்றன. ஒன்று யா மரம், இன்னொன்று யான், யாம் என்பதாகும். இருப்பினும் சங்க இலக்கியச் சொல்லடைவுகளில் 'யாஅம்' என்ற சொல் இடம்பெற்றுள்ளப் பாடல்களின் எண்ணிக்கை மட்டுமே தொகுத்தளிக்கப்பட்டுள்ளன. பொருண்மை அடிப்படையில் சொல் விளக்கம் கொடுக்கப்படவில்லை. பாடல்களில் உள்ள இந்தச் சொல்லுக்கான விளக்கத்தை உரையாசிரியர் வழியேதான் அறிந்து கொள்ள முடிகிறது.

"யா என்பது ஓர் உயிர்மெய்யெழுத்து, அஃறிணைப் படர்க்கைப் பன்மை வினா, அசைச்சொல், யா பன்னிருவர், ஒரு மரம், சந்தேகம், இல்லை, அகலம்" என விளக்கம் அளிக்கிறது மதுரைத் தமிழ்ப் பேரகராதி. (மதுரைத் தமிழ்ப் பேரகராதி இரண்டாம் பாகம், 2004, சந்தியா பதிப்பகம், அசோக்நகர், சென்னை – 83.)

ஓரெழுத்து ஒருமொழி மொத்தம் 42 எனக் குறிப்பிடும் நன்னூல் எழுத்ததிகாரப் பதவியல் பகுதி யா என்பதற்கு யாவை என்று பொருள் தருகிறது. (ஆறுமுக நாவலர், நன்னூல் காண்டிகையுரை, 1991, முல்லை நிலையம் வெளியீடு, தி. நகர், சென்னை – 17.)

யாஅம் அளபெடை எனின் அதற்கான சரியான விளக்கம் இல்லை. யாஅம் என்பது அளபெடை. படைப்பாளிகள் கவிதை எழுதுகிறபோது யா என்று தனியாகக் குறிப்பிட்டால் சீரும் தளையும் சிதையும். அதனால், அளபெடையினைப் பயன்படுத்தியிருக்கலாம் எனவும் கருதியிருக்கலாம். இது குறித்து ஆராய வேண்டியிருக்கிறது.

## நற்றிணை – யாஅம்

நற்றிணை 186 ஆவது பாலைநிலைப் பாடல் (பாடிய புலவர் பெயர் அறியப்படவில்லை) பிரிவிடை மெலிந்த தோழிக்குத் தலைவி சொல்லியதாக அமைந்துள்ளது.

தலைவன் பிரிவால் தலைவி வருந்தியதை அறிந்து தோழி மெலிகிறாள். இதைக்கண்ட தலைவி, பிறருக்கு உதவும் பேரெண்ணம் கொண்டு நன்னெஞ்சமோடு தலைவன் பொருளின் முக்கியத்துவம் அறிந்து பொருள் தேடச் சென்றான். மிக வறட்சியான அவ்வழியில் கற்களில் நீர் கசிந்து நீரூற்றில் சேரும். அந்நீரை யானை துதிக்கையால் முகந்து கொள்ளும். அச்சம் நிறைந்த அவ்வழியில் வேனிற் காலத்தில் நிறம் மாறுகின்ற ஓந்தி யா மரத்தின் மீது ஏற முடியாமல் வருந்தும். அவ்வழியே செல்லும் பாணர் தம் வருத்தம் தீர சிறிது நேரம் யாழிசைப்பர். அவ்இசைகேட்டு ஓந்தியும் வருத்தம் தீர்ந்து யா மரத்தின் மீது ஏறும். இத்தகைய வழியில் சென்ற தலைவனை நினைந்து நான் ஆற்றுவேன் என்பதாகத் தலைவி குறிப்பிடுவதை,

"கல்லூற் றீண்டல கயனற வாங்கி
யிரும்பிணர்த் தடக்கை நீட்டி நீர்நொண்டு
பெருங்கை யானை பிடியெதி ரோடுங்
கானம் வெம்பிய வறங்கூர் கடத்திடை
வேனி லோதி நிறம்பெயர் முதுபோத்துப்
பாண்யாழ் கடைய வாங்கிப் பாங்கர்
நெடுநிலை யாஅ மேறுந் தொழில
பிறர்க்கென முயலும் பேரரு ணெஞ்சமொடு
காமர் பொருட்பிணி போகிய
நாமவெங் காதலர் சென்ற வாறே". (நற்.பா.எ. 186)

என்ற பாடல் உணர்த்துகிறது. யா மரம் பாலை நிலம் சார்ந்தது என்ற தகவலை மேற்கண்ட பாடலில் இருந்து அறிந்து கொள்கிறோம்.

## குறுந்தொகை – யாஅம்

குறுந்தொகையில் 14, 37, 198, 307, 366 ஆகிய ஐந்து பாடல்களில் யாஅம் பற்றிய குறிப்புகள் இடம்பெற்றுள்ளன.

தோழி தலைவியைத் தலைவன் பார்க்க மறுக்கிற போது, அவன் தலைவியை மடலேறிப்

பெறுவேன் என்பதாக அமைந்த 14 ஆம் பாடல் குறிஞ்சித் திணையைச் சார்ந்தது. தொல்கபிலர் இப்பாடலைப் பாடியிருக்கிறார்.

அமுதத்தின் இனிமை நிரம்பிய சிவந்த நாக்கையும் அச்சம் தருவதற்குக் காரணமாக முளைத்த கூரிய பற்களையும் சிலவாகிய சொற்களை மட்டுமே பேசுகின்ற தலைவியை யான் மடலேறிப் பெறுவேன். அவ்வாறு தலைவியைப் பெற்றபிறகு, இந்த நல்லவளுடைய கணவன் இவன் என்று இதுவரை எங்களை அறியாதவர்கள் ஊரில் உள்ள பலரும் கூறுவர். அப்போது யானும் என் தலைவியும் சிறிது பொழுது நாணமடைவோம் என்பதை,

"அமிழ்துபொதி செந்நா வஞ்சி வந்த
வார்ந்திலங்கு வையெயிற்றுச் சின்மொழி யரிவையைப்
பெறுகதி லம்ம யானே பெற்றாங்
கறிகதி லம்மவிவ் வூரே மறுகி
நல்லோள் கணவ னிவனெனப்
பல்லோர் கூறயாஅ நாணுகஞ் சிறிதே".
(குறுந்.பா.எ.14)

என்ற இப்பாடல் உணர்த்துகிறது. பாடலின் இறுதி அடியில் அமைந்துள்ள யாஅ என்ற சொல் யாமரத்தைக் குறிப்பிடவில்லை. யான் என்ற பொருளில் விளக்கப்பட்டுள்ளது. குறிப்பாக கூறயாம், கூறுகயான், கூறுகயாம், கூறாயா அம், கூறயாஅம் என்பதன் அடிப்படையில்தான் இந்தச் சொல்லுக்கான பொருளை உரையாசிரியர்கள் அர்த்தப்படுத்த முயல்வதை குறுந்தொகை உரைவேறுபாடு நூல் குறிப்பிடுகிறது.

தலைவன் பிரிவால் ஆற்றாமையில் இருக்கும் தலைவியிடம் தோழி தலைவன் கடிதுவருவர் என்று ஆற்றுப்படுத்துவதாக அமைந்த குறுந்தொகை 37 ஆவது பாடல் பாலைத்திணையில் பாடப்பட்டுள்ளது. இப்பாடலைப் பாடியவர் பாலைபாடிய பெருங்கடுங்கோ.

தலைவன் பொருள்வயிற் பிரிந்து சென்றான். அவனை நினைத்து வருந்துகின்ற தலைவியை நோக்கித் தோழி, உனது காதலனாகிய தலைவன் உன்மீது பெரும்விருப்பம் கொண்டவன். அவன் சென்ற வழியில் ஆண்யானை (களிறு) தமது துணையான பெண்யானையின் பசிபோக்கும் பொருட்டு யாமரத்தின் பட்டையை உரித்து அதிலுள்ள நீரைப் பெண் யானைக்கு (பிடி) ஊட்டும். இந்நிகழ்வைக் கண்டதும் தலைவன் உன்னை நினைந்து மீண்டு வருவான் என்பதை,

"நசைபெரி துடையர் நல்கலு நல்குவர்
பிடிபசி களைஇய பெருங்கை வேழ
மென்சினை யாஅம் பொளிக்கும்
மன்பின் றோழியவர் சென்ற வாறே"
(குறுந்.பா.எ. 37)

என்ற பாடல் குறிப்பிடுகிறது. "இப்பாடலில் இடம்பெற்றுள்ள 'யாஅம் பொளிக்கும்' என்பதனை யாமரத்தைப் பிளக்கும், முறிக்கும் என்று சாம்பசிவனார், உ.வே.சா., சமாஜம், சண்முகம்பிள்ளை ஆகிய உரையாசிரியர்கள் விளக்கி உள்ளனர். உ.வே.சா. காலம் முதல் யாமரத்தின் பட்டையை உரிக்கும் எனும் பொருள் உரைகளில் வழக்குப் பெற்றுள்ளது. பட்டையை உரிப்பதால் அதன் நீர் பருகப் பெறுவதாக உ.வே.சா. முதலான ஒரு சிலர் குறித்திருப்பதற்குப் பாடலில் இடம் இல்லை. வழக்கு நோக்கிக் கூறினர் போலும். எனினும் சண்முகம் பிள்ளை முதலான ஒரு சிலர் நீர் பற்றிக் குறிக்கவில்லை. 'மென் கிளையை உறித்துக் கொடுக்கும்' என்ற சக்தியின் விளக்கமும் 'தோலை உரித்து' என்ற தமிழண்ணலின் விளக்கமும் மறுசிந்தனைக்கு உரியவை" என்று விளக்கம் தருகிறார் இரா. அறவேந்தன்.

தோழி தலைவனிடம் குறியிடம் பெயர்த்ததாகக் கபிலரால் பாடப்பட்ட குறிஞ்சித்திணை சார்ந்த 198 ஆம் பாடலில் யாஅம் என்ற சொல் இடம்பெற்றிருக்கிது.

தலைவன் தலைவியைப் பகலிலும் இரவிலும் காண வருகிறான். இது அறிந்த தோழி சந்தனம் மணம் கமழும் மார்பினை உடைய தலைவனே, இனி நீ இந்த இடத்திற்குத் தலைவியைக் காண வரவேண்டாம். ஏனென்றால் இங்கு என்னுடைய தாய் அடிக்கடி வந்து செல்பவள். நாங்களும் கிளி ஓட்டுதற் பொருட்டுத் தினைப்புனம் காக்கச் செல்வோம் என்பதை,

"மாஅங் கொன்ற மரஞ்சுட் டியவிற்
கரும்புமருண் முதல பைந்தாட் செந்தினை
மடப்பிடித் தடக்கை யன்ன பால்வார்பு
கரிக்குறட் டிறைஞ்சிய செறிகோட் பைங்குரற்
படுகிளி கடிகஞ் சேறு மடுபோ
ரெஃகுவிளங்கு தடக்கை மலையன் கானத்
தார நாறு மார்பினை
வாரற்க தில்ல வருகுவள் யாயே".
(குறுந்.பா.எ.198)

என்று குறிப்பிடுகிறது. குறிஞ்சி நிலத்தில் தினை விதைக்கும் முன்னர் அங்குள்ள யாஅம் போன்ற மரங்களை வெட்டி அவற்றைச் சுட்டெரித்துப் பின்னர் அவ்விடத்தைப் பண்படுத்தித் தினை விதைப்பது வழக்கம் என்பதை மேற்கண்ட பாடல்வழி அறிகிறோம்.

இங்கு யாஅம் மரம் குறிஞ்சி நிலத்தைச் சார்ந்ததாகக் காட்டப்பட்டுள்ளது. குறிஞ்சி வறண்டபோது, பாலைநிலமாக அடையாளப்படுத்தியதாகக் கருதலாமா? இல்லை அது குறிஞ்சி நிலம் சார்ந்த மரமா? என்பது பற்றி ஆராய வேண்டியத் தேவையிருக்கிறது.

குறுந்தொகை 307 ஆவது பாடல் பிரிவிடைக் கடுஞ்சொல் சொல்லிய தோழிக்குக் கிழத்தி உரைத்ததாக அமைந்துள்ளது. பாலை நிலம் சார்ந்த இப்பாடலைப் பாடியவர் கடம்பனூர்ச் சாண்டில்யன் ஆவார்.

தலைவன் தலைவியை விட்டுப் பிரிந்து நெடுநாளாகிறது. தலைவி வருத்தத்தோடு இருக்க, அதுகண்ட தோழி, தலைவன் கண்டிப்பாக விரைந்து வருவான் நீ பொறுமையாகக் காத்திரு எனக் கடுமையாகச் சாடுகிறாள். அதற்குத் தலைவி, சங்கு வளையல் உடைந்ததைப் போன்ற தோற்றத்துடன் பலரும் தொழ, சிவந்த வானத்தில் மாலைநேரம் மூன்றாம்பிறை வந்து தோன்றியது. ஆண்யானை, தமது துணையாகிய பெண் யானையின் நீர் வேட்கையைத் தீர்ப்பதற்காக உயர்ந்த யா மரத்தைத் தமது கொம்பால் குத்திக் கிழிக்கிறது. மரத்தில்

பசையற்ற வெண்ணிறப் பட்டையில் ஈரமின்மையால் வெறுங்கையை மட்டும் சுவைக்கிறது. துணையின் நீர்வேட்கையைத் தீர்க்க முடியாத வருத்தத்தில் துதிக்கையை மேல்நோக்கி உயர்த்திப் பிளிறியது. நாம் அழும்படி அத்தகைய வறண்ட பாலைநில வழியில் சென்ற தலைவன் என்னை மறந்துவிட்டான் என்பதை,

"வளையுடைத் தனைய தாகிப் பலர்தொழச்
செவ்வாய் வானத் தையெனத் தோன்றி
யின்னம் பிறந்தன்று பிறையே யன்னோ
மறந்தனர் கொல்லோ தாமே களிறுதன்
னுயங்குநடை மடப்பிடி வருத்த நோனாது
நிலையுயர் யாஅத் துலையக் குத்தி
வெண்ணார் கொண்டு கைசுவைத்
தண்ணாந்
தழுங்க னெஞ்சமொடு முழங்கு
மத்த நீளிடை யழப்பிரிந் தோரே".

(குறுந்.பா.எ.307)

என்ற பாடல் குறிப்பிடுகிறது. இப்பாடலில் யாமரத்தின் நீரின்மையை உணரமுடிகிறது. பிறை என்பதை வளர்மதியின் மூன்றாம் பிறை என்பர். பண்டைக் காலத்தில் மூன்றாம் பிறையைக் கொண்டு திங்களைக் (மாதம்) கணக்கிடும் வழக்கம் இருந்திருக்கலாம். (கன்னியர் பிறை தொழும் வழக்கம் அன்றைய மரபாக இருக்க வாய்ப்பிருக்கிறது.)

"ஆண்யானையின் செயலை விளக்குகையில் இருவேறு போக்குகள் உரைகளுக்கிடையில் காணப்பெறுகின்றன. யாமரத்தின் பட்டையைப் பெண்யானை கைக்கொள்ள ஆண்யானை வெறுங்கையைச் சுவைத்தது என்று இராகவையங்கார், நாகராசன், இராசாராம் போன்ற உரையாசிரியர்கள் விளக்கம் அளிக்கின்றனர். ஆண்யானை யாப்பட்டையை உரித்து அதன் நீரின்மையால் வெறுங்கையைச் சுவைத்தது" என்று ஏ.வா. வில்தன் உரை குறிப்பிடுவதாக இரா. அறவேந்தன் பதிவு செய்கிறார்.

யானையின் அன்பைக் கண்டாவது என்னைக் காண வருவான் என்பதன் அடிப்படையில் பாடல் அமைந்துள்ளது. பாலைநிலம் வறண்டு நீரில்லாமல் இருக்கிறபோது யானை யா மரத்திலிருந்து நீரைப் பெற்றுக் கொள்ளும், நீர் கிடைக்காதபோது வருத்தத்தின் உச்சத்தில் பிளிறும் என்பதாகப் புரிந்து கொள்ளலாம்.

குறுந்தொகை 366 ஆவது பாடலுக்கான கூற்று, கூற்று விளக்கம், திணை, புலவர் பெயர் பற்றிய தகவல்களை அறியமுடியவில்லை. தோழி செவிலியிடம் அறத்தொடு நிற்பதாக இப்பாடல் அமைந்துள்ளது.

தலைவியின் செயல்பாடு கண்டு அவளுக்குக் காவல் மிகுதியாகின்றது. அதனால் அவள் உடல் வேறுபாடு கண்டு செவிலி தோழியிடம் கேட்க, தோழி அறத்தொடு நிற்பதாக இப்பாடல் அமைந்துள்ளது. தலைவி சிறுவயதில் சுனையில் உள்ள நீல மலரை விரும்புகிறாள். ஆனால் அந்த மலரை அவளால் பறிக்க முடியவில்லை என வருந்துகிறாள். வேறு மலர் பறிக்கலாம் என்றாலும் அவளது மனம் ஏற்கவில்லை. தலைவனிடம் அம்மலரைப் பறித்துத் தரும்படிக் கேட்கிறாள். இத்தகைய அவள் செயல் ஊழ் விதியால் நிகழ்ந்தது. அதனை ஆய்ந்து பேச என்னிடம் என்ன உரிமை உள்ளது? அவள் செயல் குற்றமன்று என்பதை.

"பால்வரைத் தமைத்த லல்ல தவர்வயிற்
சால்பளந் தறிதற் கியாஅம் யாரோ
வெறியாள் கூறவு மமையா ளதன்றலைப்
பைங்கண் மாச்சுனைப் பல்பிணி யவிழ்ந்த
வள்ளிதழ் நீல நோக்கி யுள்ளகைப்
பொழுத கண்ண ளாகிப்
பழுதன் றம்மவிவ் வாயிழை துணிவே".

(குறுந்.பா.எ.366)

என்ற பாடல்வழி அறியலாம். மேற்கண்ட பாடலில் உள்ள யாஅம் என்ற சொல்லிற்கு யாம், எம்மிடம் என்று பொருள் கொள்ளப்பட்டுள்ளது. பாடலில் யாஅம் சொல்லின் பொருள் மாறுபட்டுள்ளதை அறிகிறோம்.

குறுந்தொகையில் யாஅம் என்ற சொல் 5 பாடல்களில் இடம்பெற்றாலும் 2 பாடல்கள் (14,366) யாஅம் என்பதற்கு யான் என்ற பொருளைத் தருகின்றன. மூன்று பாடல்கள் யாம் என்பதற்கு யாமரம் என்று பொருள் தருகின்றன. பொருட்களஞ்சியம் சொற்கள் இடம் பெறும் பாடல்களை மட்டுமே தொகுத்துக் கொடுத்திருப்பதை உணரலாம். ஒரே சொல் வெவ்வேறு பொருள்களைத் தருகின்றன என்பதை ஆய்வின் வழி அறியமுடிகிறது.

## ஐங்குறுநூறு – யாஅம்

ஐங்குறுநூற்றில் யாஅம் என்ற சால் 333 ஆம் பாடலில் இடம்பெற்றுள்ளது. பாலை நிலம் சார்ந்த இப்பாடலைப் பாடியவர் ஓதலாந்தை.

தலைவன் பிரிவை ஆற்றாத தலைவி, தலைவன் பொருள் தேடச் சென்ற மலை பொருந்திய நல்ல நாடிட்டின்கண் வாழக்கூடிய பறவைகளின் பெருந்தொகுதி தலைவனை நோக்கி, அஃறிணையாகிய யாம் எமது துணையைப் பிரிந்து வாழ்வதில்லை. நீ ஏன் துணையைப் பிரிந்து செல்கிறாய் என்று அவனைப் போகவிடாமல் தடுத்திருக்க வேண்டும். தடுத்திருந்தால் அவன் உடனே என்னைக் காண வந்திருப்பான். ஆனால் தடுக்கவில்லை ஆதலால் அந்தப் பறவைகள் வல்லமையற்றன என்பதை,

"அம்ம வாழி, தோழி யாவதும்
வல்லா கொல்லோ தாமே யவண
கல்லுடை நன்னாட்டுப் புள்ளினப் பெருந்தோ
டியாஅந் துணைபுணர்ந் துறைதும்
யாங்குப் பிரிந்துறைதி யென்னா தவ்வே".

(ஐங்.பா.எ.333)

என்ற பாடல் குறிப்பிடுகிறது. இந்தப் பாடல் யாஅம் என்பது யாமரத்தைக் குறித்த சொல் அல்ல என்பதை உணர்த்துகிறது.

## பரிபாடல் – யாஅம்

பரிபாடலின் ஐந்தாம் பாடல் செவ்வேள் (முருகன்) பற்றியது. பாடலைப் பாடியவர் கடுவன் இளவெயினனார். இப்பாடலின் 178 ஆவது அடியில்

யாஅம் என்ற சொல் இடம்பெற்றுள்ளது.

முருகனிடம், உன்னுடைய திருவருளை விரும்பாத கயவர்களால் அடையமுடியாத உன் திருவடிநிழல் உன் அருட்குணத்தை எதிர்கொண்ட சான்றோர்களால் எளிதில் அடைய முடியும் என்பது உண்மை. தேர் உருளை போன்ற பூக்கள் கொண்ட கொத்தினை உடைய கடப்பமாலையை அணிந்த முருகப்பெருமானே, யாம் உன்னிடம் வேண்டுவன, இந்த உலகில் இன்பம் துய்க்கப் பயன்படும் பொருள்களும் உலகப் பொருள்களைத் தருவதற்குக் காரணமாக அமைகின்ற பொன்னும் (தங்கம்) அவற்றால் துய்க்கப்படும் இந்த உலக இன்பமும் அல்ல. எங்களுக்கு வீடுபேற்றை அளிக்கும் உமது திருவருளும் திருவருள் பெற யாம் உன்னிடம் செலுத்தும் உண்மையான அன்பும் அந்த அன்பு உள்ளத்துள் தோன்றுவதற்குக் காரணமாக அமைகின்ற அறமும் போதும் என்பதை,

"நின்னிழ லன்னோ ரல்ல தின்னோர்
சேர்வா ராதலின், யாஅ மிரப்பவை
பொருளும் பொன்னும் போகமு மல்ல நின்பா
லருளு மன்பு மறனும் மூன்று
முருளிணர்க் கடம்பி னொலிதா ரோயே".
(பரி.பா.எ. 5, பா.அ.77–81)

என்ற பாடல் குறிப்பிடுகிறது. இப்பாடலில் "யாஅம்" என்ற சொல் யாம் என்ற பொருளில் விளக்கப்பட்டுள்ளது என்பதை அறிகிறோம்.

### கலித்தொகை – யாஅம்

கலித்தொகையில் 143 ஆம் பாடலில் 'யாஅம்' என்ற சொல் இடம் பெற்றுள்ளது. பாடலைப் பாடியவர் நல்லந்துவனார்.

நெய்தற்கலிப் பாடலில் தலைவன் வரைவை (திருமணம்) இடை வைத்துப் பிரிவு நீட்டித்த இடத்துத் தலைவி பிரிவைத் தாங்கிக் கொள்ள முடியாமல் வெட்கம் கடந்து உள்ளங் கலங்கி, பொழுதொடு புலம்பி, கூறத்தகாதவற்றையெல்லாம் கூறி அறிவு அழிந்து பேசுகிறாள். தலைவன் வந்து சேர்ந்த பிறகு கலக்கம் நீங்கித் தெளிவடைந்தாள் என்ற அறுபது அடிகள் கொண்ட பாடலில் 26 – 30 ஆவது பாடலடிகள்,

ஞாயிறு மறைவதைக் கண்டு பிரிந்தவர்களுக்கு வருத்தம் அளிக்கும் படியாக மாந்தளிர் போன்ற நிறம் கொண்ட மாலை நேரத்திற்கு முன்னதாக, மகளிர் மாலைகள் சூடி, ஆடவர்மேல் தாம் வைத்த நலத்தைப் பாடி இன்பமடைவர். ஆச்சா மரம் தளிர்க்கும் காட்டிடைச் சென்றவர் திரும்பி வந்தால் அவர்களைப் போல யானும் மனம் மகிழ்வேன் என்பதை,

"அழிதக மாஅந் தளிர்கொண்ட பொழுதினா
னிவ்வூரார்
தாஅந் தளிர்சூடித் தந்நலம் பாடுப
வாஅந் தளிர்க்கு மிடைச்சென்றார் மீடரின்
யாஅந் தளிர்க்குவெ மன்". (கலி.பா.எ.143, பா.அ.26–30)

என்று குறிப்பிடுகிறது. இப்பாடலில் இடம்பெற்றுள்ள யாஅம் ஆச்சாமரம் என்ற பொருளைத் தருகிறது. பிற பாடல்களில் யாஅம் என்பதற்கு யா மரம் என்று உரையாசிரியர்கள் பொருள்தர, இப்பாடல் யாஅம் என்பதற்கு ஆச்சா மரம் என்று பொருள் தருவது புதுமையாக இருக்கிறது. "யா மரமே தற்போது ஆச்சா, காராச்சா எனவும் அஞ்சன் என வணிக நடைமுறையில் குறிக்கப் பெறுவதாகத் தமிழறிஞர் ப. அருளி தன்னுடைய யா நூலில் தெரிவித்திருக்கிறார்" என்ற குறிப்பை யுகபாரதி மேல்கணக்கு என்ற தமது நூலில் பதிவு செய்திருக்கிறார்.

"ஆச்சா மரம் சங்க இலக்கியம், புராண, இதிகாசங்களிலும் பதிவு செய்யப்பட்டுள்ளது. இந்தியாவிலேயே மிக வலிமையான மரங்களில் ஒன்று ஆச்சா. இம்மரத்தின் பட்டைகளைக் கொண்டு வலிமையான கயிறுகளைத்தயார் செய்திருக்கின்றனர். யானைகளைக் கட்டுவதற்கு இக்கயிறு பயன்பாட்டில் இருந்துள்ளது. பாரம்பரியமாகப் பல நூறாண்டுகளாக நாதஸ்வரம் ஆச்சாமரத்தால் செய்யப்பட்டிருக்கிறது என்பது குறிப்பிடத்தக்கது. இம்மரத்தை யாமரம், கராச்சி மரம் என்றும் அழைப்பர். இம்மரத்தின் பூர்வீகம் இந்தியா" என ஆச்சா மரம் குறித்துத் தினம் தினம் வனம் செய்வோம் என்ற தமது நூலில் விரிவாக விளக்கியிருப்பார் பூமி ஞானசூரியன்.

### அகநானூறு – யாஅம்

அகநானூறு 59 ஆம் பாலைத்திணைப் பாடல் யாஅம் மரத்தைக் குறிப்பிடுகிறது. இப்பாடலைப் பாடியவர் மதுரை மருதனிளநாகனார்.

தலைவன் பொருள் தேடிப் பிரிந்ததால் குறித்த காலத்தில் வரமுடியவில்லை. அதனால் வருத்தமுற்றுப் பேரழகு இழந்து உடல் வேறுபட்டத் தலைவியிடம் அவர் விரைந்து வருவார் அதுவரை ஆற்றியிருக்குமாறு தோழி சொல்லியதாக இப்பாடல் அமைந்துள்ளது.

வடதிசையில் நீர்வளம் குன்றாமல் ஓடிக்கொண்டிருக்கின்ற யமுனை ஆற்றின் மலையையுடைய பெருந்துறையில் நீராடிக் கொண்டிருக்கின்ற ஆயர் பெண்கள் குளிர்ச்சி பொருந்திய தழையை உடுத்திக் கொள்வதற்காகக் குருந்தமரக் கிளையை வளையுமாறு மிதித்துத் தந்தக் கண்ணபிரான் போல, தலைவன் சென்ற வழியில் மென்மையான தலையையுடைய இளைய பெண்யானை அழகிய தளிர்களை உண்ணும்படி, ஆண்யானை ஓங்கி வளர்ந்த யா மரக்கிளையை வளைத்துத் தரும். அப்போது பெருகும் மதநீரால் நனைந்த கன்னத்தில் படியும் வண்டுகளை அந்த மரத்தின் குழையால் ஓட்டும். இக்காட்சியைக் கண்ட தலைவன் உன்னைக் காண விரைந்து வருவான் என்பதை,

"தண்கயத் தமன்ற வண்டுபடு துணைமலர்ப்
பெருந்தகை யிழந்த கண்ணினை பெரிதும்
வருந்தினை வாழியர் நீயே வடாஅது
வண்புனற் றொழுநை வார்மண லகன்றுறை
யண்டர் மகளிர் தண்டழை யுடீயர்
மரஞ்செல மிதித்த மாஅல் போலப்
புன்றலை மடப்பிடி யுணீஇய ரங்குழை
நெடுநிலை யாஅ மொற்றி நனைகவுட்
படிஞிமிறு கடியுங் களிறே தோழி".
(அகம்.பா.எ.59)

என்ற பாடல் விளக்குகிறது. இப்பாடல் யாஅம் என்பதை மரம் என்று குறிப்பிட்டாலும் அதன் இழை, தழையை யானைக்குக் கொடுப்பதாகப் பாடப்பட்டுள்ளது. பாடல் வளமான யா மரம் குறித்துப் பதிவு செய்துள்ளது.

## மதிப்பீடு

- யாஅம் என்ற சொல் சங்க இலக்கியத்தில் 10 பாடல்களில் பதிவு செய்யப்பட்டிருக்கின்றன. அவற்றுள் ஆறு பாடல்களில் மட்டுமே யாஅம் என்பது யாமரம், ஆச்சா மரம் என்னும் பொருளில் உரையாசிரியர்களால் விளக்கப்பட்டுள்ளது.
- மீதமுள்ள நான்கு பாடல்களில் (குறுந்.14, 366, ஐங்.333, பரி.5) இடம்பெற்றுள்ள யாஅம் என்ற சொல்லிற்கு யான், யாம் என்று உரையாசிரியர்கள் பொருள் விளக்கம் தருகின்றனர்.
- யாமரம் பாலை நிலம் சார்ந்தது. வறட்சியான காலகட்டத்தில் நீரை சேமித்து வைக்கும் தன்மையுடையது. ஒரே ஒரு பாடலில் (குறுந்.198) மட்டும் குறிஞ்சி நிலத்தில் இம்மரம் இருப்பதாகக் காட்சிப்படுத்தப்பட்டுள்ளது.
- மற்றொரு பாடலில் (அகம்.59) யாஅம் என அழைக்கப்படும் ஆச்சாமரத்தின் இலை, தழைகளை யானை உணவாக உட்கொள்ளும் என்ற செய்தியும் உண்டு.
- யாமரம் வளமாகவும் நீரை சேமிக்கும் இயற்கை சூழமைவு கொண்டதாகவும் பாடல்களில் அடையாளப்படுத்தப்பட்டுள்ளமை குறிப்பிடத்தக்கது.
- யாஅம் என்ற சொல்லிற்கு விளக்கமளிப்பதில் உரையாசிரியர்களிடையே வேறுபாடு இருந்துள்ளமையை கட்டுரையின் வாயிலாக அறிந்துகொள்ள முடிகிறது.
- யாமரம் ஆச்சா மரம், காராச்சா மரம் என்ற பெயர்களில் இம்மரம் வழக்கத்தில் இருந்திருக்கிறது.
- யாஅம் என்ற சங்கச் சொல்லின் வாயிலாக ஆதிப்பூர்வகுடி மக்களின் நிலம், திணை வாழ்வியல் குறித்து அறிந்து கொள்ள முடிகிறது.

## துணை நூல்கள்


1. மாதையன், பெ., 2007, சங்க இலக்கியச் சொல்லடைவு, முதற்பதிப்பு, பதிப்புத்துறை, தமிழ்ப்பல்கலைக்கழக வெளியீடு, தஞ்சாவூர் – 613010.
2. வேங்கடசாமி நாட்டார், ந.மு., வேங்கடாசலம் பிள்ளை, ரா., 1961, அகநானூறு, முதற்பதிப்பு, தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், திருநெல்வேலி – 06.
3. சோமசுந்தரனார், பொ.வே. 1974, அகநானூறு (மணிமிடைப் பவளம், நித்திலக்கோவை), முதற்பதிப்பு, தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், திருநெல்வேலி – 06.
4. சோமசுந்தரனார், பொ.வே. 1975, பரிபாடல் மூலமும் உரையும், முதற்பதிப்பு, தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், திருநெல்வேலி – 06.
5. பாலசுப்பிரமணியன். கு.வெ. (உ.ஆ.), 2004, நற்றிணை மூலமும் உரையும், முதற்பதிப்பு, நியு செஞ்சுரி புத்தக நிலையம், சென்னை – 98.
6. பாலசுப்பிரமணியன் .கு.வெ. (உ.ஆ.), 2004, ஐங்குறுநூறு மூலமும் உரையும், முதற்பதிப்பு, நியு செஞ்சுரி புத்தக நிலையம், சென்னை – 98.
7. கதிரைவேற் பிள்ளை. ந., 1981, தமிழ்மொழியகராதி, முதற்பதிப்பு, ஏசியன் எடுகேஷனல் சர்வீசஸ், சி – 2/15, எஸ்.டி.எ., புதுதில்லி – 110016.
8. பின்னத்தூர் நாராயணசாமி ஐயர், (உ.ஆ.), 2007, குறுந்தொகை, முதற்பதிப்பு, தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், திருநெல்வேலி – 06.
9. நச்சினார்க்கினியர் (உ.ஆ.), 1943, கலித்தொகை மூலமும் உரையும், முதற்பதிப்பு, தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், திருநெல்வேலி – 06.
10. அறவேந்தன். இரா. குறுந்தொகை உரை வேறுபாடு, 2024, முதற்பதிப்பு, நியூ செஞ்சுரி புத்தக நிலையம், சென்னை – 98.
11. யுகபாரதி, 2024, மேல்கணக்கு பத்துப்பாட்டும் எட்டுத் தொகையும், முதற்பதிப்பு, நேர்நிரை வெளியீடு, இரண்டாம் தளம், ஆழ்வார் திருநகர், சென்னை – 87.
12. பூமி ஞானசூரியன், 2021, தினம் தினம் வனம் செய்வோம், முதற்பதிப்பு, எவர்கிரீன் பப்ளிகேசன்ஸ், தெக்குப்பட்டு, திருப்பத்தூர் – 635801.
13. Thomas Lehmann And Thomas Malten, 1993, A WORD INDEX FOR CANKAM LITERATURE, 2nd Edition, Institute Of Asian Studies, Chemmancherry, Chennai – 19, Tamilnadu, India.

# பேரூராட்சிகள் இயக்குநரகத் துறையில் புதிய கலைச்சொற்களை உருவாக்கி இணையவழியில் அறிமுகம் செய்தல் கூட்டம்







தமிழ்நாடு அரசு, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் சார்பில், புதிய கலைச்சொற்களை உருவாக்கி அவற்றை இணையவழியில் அறிமுகம் செய்வதற்குத் தமிழ்நாடு அரசு ஆணை பிறப்பித்துள்ளது. அந்த அரசாணைக்கிணங்க 03.09.2024ஆம் நாள், சென்னை எம்.ஆர்.சி யில் உள்ள பேரூராட்சிகளின் இயக்குநரக கூட்டம் நகராட்சி கூட்டரங்கில் நடைபெற்ற புதிய கலைச்சொல் உருவாக்கக் கூட்டத்திற்கு அகரமுதலி இயக்கக இயக்குநர் (மு.கூ.பொ.) திருமதி க. பவானி அவர்கள் தலைமை வகித்தார். தொகுப்பாளர் திரு.வே. பிரபு அவர்கள் வரவேற்புரை வழங்க, பதிப்பாசிரியர் முனைவர் மா. பூங்குன்றன் அவர்கள் திட்டத்தின் நோக்கம் குறித்து எடுத்துரைத்தார். உதவி இயக்குநர் திரு. ந.செந்தில்குமார் அவர்கள் வாழ்த்துரை வழங்கினார்.

**இக்கூட்டத்தில் வழங்கப்பட்ட தமிழ்க் கலைச்சொற்களுள் சில :**

M.Sand– கல் மணல்  
P.Sand– பொடி மணல்  
Dum Site – குப்பை கொட்டிடம்  
LED – ஒளிர்வி முனை  
Crematorium– எரிவளிச் சுடுகாடு  
garitier Erea – புதுமை எரிமேடை  
மானியம் – நல்கை  
மகஜர் – மனு  
கிராவல் – சரளை

கூட்டத்தில் பங்கேற்ற பேரூராட்சிகளின் இயக்கக அலுவலர்கள், பிறமொழிச் சொற்களுக்கான தமிழ்க் கலைச்சொற்களை உருவாக்கி இணையத்தின் வழியாக மக்களின் பயன்பாட்டுக்கு வழங்கும் நல்லதொரு திட்டத்திற்குத் தொடர்ந்து தங்களின் பங்களிப்பை வழங்குவோம் என்றும் தெரிவித்தனர். கூட்டத்தில் புலவர் வெற்றியழகன், திரு. அ. மதிவாணன், நூல் மதிப்புரையாளர் கவிஞர் மெய்ஞானி பிரபாகர பாபு, முனைவர் இராமு, திரு.சம்பத்குமார், ஆகியோர் பங்கேற்றனர். நிறைவாக, திட்ட ஒருங்கிணைப்பாளர் வே. பிரபு நன்றி கூறினார்.

# எழும்பூர்– அருங்காட்சியகத் துறையில் புதிய கலைச்சொற்களை உருவாக்கி இணையவழியில் அறிமுகம் செய்தல் கூட்டம்



05.09.2024ஆம் நாள், சென்னை எழும்பூரில் உள்ள அருங்காட்சியகக் கூட்டரங்கில் நடைபெற்ற புதிய கலைச்சொல் உருவாக்கக் கூட்டத்திற்கு அகரமுதலி இயக்கக இயக்குநர் (மு.கூ.பொ.) திருமதி க. பவானி அவர்கள் தலைமை வகித்தார். தொகுப்பாளர் திரு.வே. பிரபு அவர்கள் வரவேற்புரை வழங்க, பதிப்பாசிரியர் முனைவர் மா. பூங்குன்றன் அவர்கள் திட்டத்தின் நோக்கம் குறித்து எடுத்துரைத்தார். அருங்காட்சியகத்துறை உதவி இயக்குநர் திரு. ந. சுந்தரராஜன் அவர்கள் வாழ்த்துரை வழங்கினார். இக்கூட்டத்தில் வழங்கப்பட்ட தமிழ்க் கலைச்சொற்களுள் சில :




| | | |
|---|---|---|
| Security thread | – | பாதுகாப்பு இழை |
| Micro lettering | – | மீச்சிறு எழுத்துகள் |
| Watermark image | – | நீரோட்ட உருவப்படம் |
| Currency chest | – | பணத்தாள் பேழை |
| Underprint note | – | கீழச்சுப் பணத்தாள் |
| Language panel | – | மொழிகள் குறிப்பிடம் |
| Cast Coin | – | உருக்கி வார்க்கப்பட்ட நாணயம் |
| Obverse | – | நாணயத்தின் முன்பக்கம் |
| Reverse | – | நாணயத்தின் பின்பக்கம் |

கூட்டத்தில் பங்கேற்ற அருங்காட்சியகத் துறையினர், பிறமொழிச் சொற்களுக்கான தமிழ்க் கலைச்சொற்களை உருவாக்கி இணையத்தின் வழியாக மக்களின் பயன்பாட்டுக்கு வழங்கும் நல்லதொரு திட்டத்திற்குத் தொடர்ந்து தங்களின் பங்களிப்பை வழங்குவோம் என்றும், அருங்காட்சியகத்துறை என்ற பெயரில் கலைச்சொல்லாக்கப் புலனக்குழுவை தொடங்கி தங்களை இணைத்தால், அதன்வழியே நாள்தோறும் துறைசார்ந்த புதிய கலைச்சொற்களை உருவாக்கிப் பகிர்கிறோம் என்றும் தெரிவித்தனர். கூட்டத்தில் புலவர் வெற்றியழகன், திரு. அ. மதிவாணன், நூல் மதிப்புரையாளர் கவிஞர் மெய்ஞானி பிரபாகர பாபு, முனைவர் ஆ. அரிமாப் பாமகன் ஆகியோர் பங்கேற்றனர். நிறைவாக, புவியியல் பிரிவு காப்பாட்சியர் திருமதி சு. தனலட்சுமி அவர்கள் நன்றி கூறினார்.

# அகரமுதலித் திட்ட இயக்ககத்
# தமிழ்க் கலைக்கழகத்தின் 157–ஆவது கூட்டம்




தமிழ்நாடு அரசு, தமிழ் வளர்ச்சித் துறை, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத் தமிழ்க் கலைக்கழகத்தின் 157–ஆவது கூட்டம் இயக்குநர் பவானி ஆலோசனை யின்படி நேற்று 9 ஆம் நாள் காலை 10.மணியளவில் நடைபெற்றது.

இன்றைய அறிவியல் தொழில்நுட்ப உலகில் நாள்தோறும் பெருகிவரும் பல்வேறு துறைசார்ந்த, பிறமொழிச் சொற்களுக்கு இணையான தமிழ்க்கலைச்சொற்களை உடனுக்குடன் வடிவமைத்து, மக்களின் பயன்பாட்டிற்குக் கொண்டுவரும் நோக்கத்தை அடிப்படையாகக் கொண்டு அகரமுதலி இயக்ககத்தின் 'தமிழ்க் கலைக்கழகம்' செயற்பட்டுவரும் நிலையில், மக்களின் பேச்சுவழக்கிலும், ஊடகங்களிலும் காணப்படும் பிறமொழிக் கலைச்சொற்கள் இவ்வியக்ககப் பதிப்பாசிரியர்கள், உதவிப் பதிப்பாசிரியர் மற்றும் தொகுப்பாளர்களால் தொகுக்கப்பட்டு, அவற்றிற்கிணையான தமிழ்க் கலைச்சொற்கள் வடிவமைக்கப்படுகின்றன. அச்சொற்கள் திங்கள் இருமுறை நடைபெறும் தமிழ்க் கலைக்கழகக் கூட்டங்களில் சீராக்கம் செய்யப்பட்டு சொற்குவை வலைத்தளத்தில் பதிவேற்றம் செய்யப்படுகின்றன.

அந்த வகையில் தமிழ்க் கலைக்கழகத்தின் இந்த கூட்டத்தில், அலுவல்சாரா உறுப்பினர்களான புலவர் வெற்றியழகன், முனைவர் கு. பாலசுப்பிரமணியன், முனைவர் இரா.கு. ஆல்துரை, அ. மதிவாணன்,உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத் தமிழ்மொழி (ம) மொழியியல் புல உதவிப் பேராசிரியர் முனைவர் நா. சுலோசனா, நூல் மதிப்புரையாளர் கவிஞர் மெய்ஞானி பிரபாகர பாபு மற்றும் அலுவல்சார் உறுப்பினர்கள் ஆகியோர் பங்கேற்றனர். கூட்டத்தில் 154 தமிழ்க் கலைச் சொற்களுக்கு வல்லுநர் குழு ஏற்பளித்துள்ளது.

**ஏற்பளிக்கப் பெற்ற கலைச்சொற்களுள் சில :**

| | |
|---|---|
| Embourgeoisement | முதலாளியியம் |
| Fat shame | பருமன் எள்ளல் |
| Finite game | வரையறை ஆட்டம் |
| Founded game | புத்தாட்டம் |
| Funwashing | உரு மேம்பாடு |
| Geeky | அறிவு ஆர்வலர் |
| pod point | மின்னேற்றுப் புழை |
| space diversity | விண்ணலைப் பல்வகைமை |
| Long covid | நெடுநாள் மகுடைத் தொற்று |
| Manufactured home | உடனடி இல்லம் |
| Micro observer | நுண்ணோக்கர் |
| good samaritan | நன்னயர் |
| Nanopolymer | மீ நுண் பலபடிச்சேர்மம் |

# அகரமுதலித் திட்ட இயக்ககத் தமிழ்க் கலைக்கழகத்தின் 158–ஆவது கூட்டம்




தமிழ்நாடு அரசு, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத் தமிழ்க் கலைக்கழகத்தின் 158–ஆவது கூட்டம் 12.08.2024 ஆம் நாள் நடைபெற்றது.

தமிழ்க் கலைக்கழகத்தின் 158–ஆவது கூட்டத்தில், அலுவல்சாரா உறுப்பினர்களான புலவர் வெற்றியழகன், முனைவர் கு. பாலசுப்பிரமணியன், முனைவர் இரா.கு. ஆல்துரை, திரு. அ. மதிவாணன், 'அறிவியல் ஒளி' ஆசிரியர் திரு. நா.சு. சிதம்பரம் ஆகியோர் பங்கேற்றனர். மேலும், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத் தமிழ்மொழி (ம) மொழியியல் புல உதவிப் பேராசிரியர் முனைவர் நா. சுலோசனா, மற்றும் அலுவல்சார் உறுப்பினர்கள் ஆகியோர் பங்கேற்றனர். இக்கூட்டத்தில் 182 தமிழ்க் கலைச் சொற்களுக்கு வல்லுநர் குழு ஏற்பளித்துள்ளது.

ஏற்பளிக்கப்பெற்ற கலைச்சொற்களுள் சில :

| | |
|---|---|
| Perception Change | கண்ணோட்ட மாற்றம் |
| Perceptual Task | கண்ணோட்ட இடுபணி |
| Perspicacious Person | நுண்மதியர் |
| Perspicuous Expression | நுண்மதி உரை |
| Pesticide Free | பூச்சிக்கொல்லியின்மை |
| Physical Scar | உடல் தழும்பு |
| Plot Promotion | மனை உருவாக்கம் |
| Precarious Balance | கொடும் இடர்நிலை |
| Precarious Equilibrium | கொடும் இடர்ச்சமநிலை |
| Prejuvenation | மூவாமை |
| Prepper | அணியர் |
| Quattuordecillion | ஐயொன்பது பதின்மடி எண் |
| Rejectionist | மறுப்பாளர் |
| Risk Benefit Analysis | இடர்விளைவுப் பகுப்பாய்வு |
| Scarce Resources | பற்றாக்குறை வளங்கள் |
| Sensitive Drilling Machine | நுண் துரப்பணப்பொறி |

# அகரமுதலித் திட்ட இயக்ககத் தமிழ்க் கலைக்கழகத்தின் 159–ஆவது கூட்டம்




தமிழ்நாடு அரசு, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத் தமிழ்க் கலைக்கழகத்தின் 159–ஆவது கூட்டம் 21.08.2024 ஆம் நாள் நடைபெற்றது.

தமிழ்க் கலைக்கழகத்தின் 159–ஆவது கூட்டத்தில், அலுவல்சாரா உறுப்பினர்களான புலவர் வெற்றியழகன், முனைவர் கு. பாலசுப்பிரமணியன், முனைவர் இரா.கு. ஆல்துரை, திரு. அ. மதிவாணன், 'அறிவியல் ஒளி' ஆசிரியர் திரு. நா.சு. சிதம்பரம் ஆகியோர் பங்கேற்றனர். மேலும், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத் தமிழ்மொழி (ம) மொழியியல் புல உதவிப் பேராசிரியர் முனைவர் நா. சுலோசனா, நூல் மதிப்புரையாளர் கவிஞர் மெய்ஞானி பிரபாகர பாபு மற்றும் அலுவல்சார் உறுப்பினர்கள் ஆகியோர் பங்கேற்றனர். இக்கூட்டத்தில் 154 தமிழ்க் கலைச் சொற்களுக்கு வல்லுநர் குழு ஏற்பளித்துள்ளது.

**ஏற்பளிக்கப்பெற்ற கலைச்சொற்களுள் சில :**

| | | |
|---|---|---|
| abbreviator | – | சுருக்குநர் |
| anopsia | – | பார்வைக் குறைபாடு |
| applanometer | – | விழியழுத்தமானி |
| backbone mountain | – | மலைப்புறம் |
| benevolent chief | – | பேரருளாளன் |
| big ticket | – | பெருவிலை |
| bituminous coal | – | கற்கரி |
| bound up | – | தன்துயர் விதும்பல் |
| bowl haircut | – | வட்டை முடிவெட்டு |
| Braid Group | – | இழைக்கற்றை |
| bungee cord | – | கொக்கிக் கயிறு |
| clandestine alliance | – | கரவுவுக்கூட்டணி |
| Co articulation | – | இணை ஒலிப்பு |

# அகரமுதலித் திட்ட இயக்ககத் தமிழ்க் கலைக்கழகத்தின் 160–ஆவது கூட்டம்




தமிழ்நாடு அரசு, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத் தமிழ்க் கலைக்கழகத்தின் 160–ஆவது கூட்டம் 22.08.2024 ஆம் நாள் நடைபெற்றது. தமிழ்க் கலைக்கழகத்தின் 160–ஆவது கூட்டத்தில், அலுவல்சாரா உறுப்பினர்களான புலவர் வெற்றியழகன், முனைவர் இரா.கு. ஆல்துரை, 'அறிவியல் ஒளி' ஆசிரியர் திரு. நா.சு. சிதம்பரம் ஆகியோர் பங்கேற்றனர். மேலும், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத் தமிழ்மொழி (ம) மொழியியல் புல உதவிப் பேராசிரியர் முனைவர் நா. சுலோசனா, நூல் மதிப்புரையாளர் கவிஞர் மெய்ஞானி பிரபாகர பாபு மற்றும் அலுவல்சார் உறுப்பினர்கள் ஆகியோர் பங்கேற்றனர். இக்கூட்டத்தில் 205 தமிழ்க் கலைச் சொற்களுக்கு வல்லுநர் குழு ஏற்பளித்துள்ளது.

ஏற்பளிக்கப்பெற்ற கலைச்சொற்களுள் சில :

| | |
|---|---|
| Dogfight | – வான்படைச் சண்டை |
| encroachment area | – வன்கவர்ப்புப் புலம் |
| energy converter | – ஆற்றல்மாற்றி |
| Eyebrow Pencil | – புருவ மைக்கோல் |
| fantastical narrative | – வியப்புரை |
| fantastically rich | – வியத்தகு வளமை |
| impercipience | – உணரவியலாமை |
| imperfect rhyme | – நிறைவற்ற இயைபு |
| inefficient fellow | – திறமையிலி |
| intense negotiation | – மும்முரக் கலந்துரையாடல் |
| Kuska | – உசிலைச்சோறு |
| local drama | – உள்ளூர்க்கூத்து |
| local pressure | – உள்ளூர் நெருக்கடி |
| modern fashion | – இற்றைய நயப்பு |
| non learning | – பயிலாமை |
| observer delegation | – கூர்நோக்கர் குழு |

# அகரமுதலித் திட்ட இயக்ககத் தமிழ்க் கலைக்கழகத்தின் 161–ஆவது கூட்டம்




தமிழ்நாடு அரசு, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத் தமிழ்க் கலைக்கழகத்தின் 161–ஆவது கூட்டம் 28.08.2024 ஆம் நாள் நடைபெற்றது.

அகரமுதலி இயக்கக இயக்குநர் (மு.கூ.பொ.) திருமதி க. பவானி அவர்கள் தலைமையில் நடைபெற்ற தமிழ்க் கலைக்கழகத்தின் 161–ஆவது கூட்டத்தில், அலுவல்சாரா உறுப்பினர்களான புலவர் வெற்றியழகன், முனைவர் கு. பாலசுப்பிரமணியன், முனைவர் இரா.கு. ஆல்துரை, திரு. அ. மதிவாணன், 'அறிவியல் ஒளி' ஆசிரியர் திரு. நா.சு. சிதம்பரம் ஆகியோர் பங்கேற்றனர். மேலும், தமிழ்வளர்ச்சி இயக்ககத் தட்டச்சர் திரு. ஜெ. உதயரசன் மற்றும் அலுவல்சார் உறுப்பினர்கள் ஆகியோர் பங்கேற்றனர். இக்கூட்டத்தில் 165 தமிழ்க் கலைச் சொற்களுக்கு வல்லுநர் குழு ஏற்பளித்துள்ளது.

**ஏற்பளிக்கப்பெற்ற கலைச்சொற்களுள் சில :**

| | |
|---|---|
| Amblyopia | சிறார் மங்கல் பார்வை |
| Arteriovenous shunt | நாள நாளித் தட மாற்றம் |
| Auspicious moment | மங்கலப்பொழுது |
| Backbone router | அடிப்படைத் திசைவி |
| Brinkmanship | பயன் நோக்கு அச்சுறுத்தல் |
| Brush pile | சுள்ளிக்குவியல் |
| Brutality meted out | கொடுமை இழைக்கை |
| Buoyant humour | பெருநகை |
| Buzz kill | மகிழ்ச்சிக் குலைப்பன் |
| Chatbot | உரையாட்டு எந்திரன் |
| Chelation therapy | நாளி சீரமைப்பு மருத்துவம் |
| Clear view cover | உறைதரு தரவல் காட்சி |
| Cockroach theory | வணிகக் கரவுக்கோட்பாடு |

# அகரமுதலித் திட்ட இயக்ககத் தமிழ்க் கலைக்கழகத்தின் 162–ஆவது கூட்டம்




தமிழ்நாடு அரசு, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத் தமிழ்க் கலைக்கழகத்தின் 162–ஆவது கூட்டம் 06.09.2024 ஆம் நாள் நடைபெற்றது.

கூட்டத்தில், அலுவல்சாரா உறுப்பினர்களான புலவர் வெற்றியழகன், முனைவர் கு. பாலசுப்பிரமணியன், முனைவர் இரா.கு. ஆல்துரை, திரு. அ. மதிவாணன் ஆகியோர் பங்கேற்றனர். மேலும், தமிழ்வளர்ச்சி இயக்ககத் தட்டச்சர் திரு. ஜெ. உதயரசன், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத் தமிழ்மொழி (ம) மொழியியல் புல உதவிப் பேராசிரியர் முனைவர் நா. சுலோசனா, முனைவர் ஆ. அரிமாப் பாமகன், நூல் மதிப்புரையாளர் கவிஞர் மெய்ஞானி பிரபாகர பாபு மற்றும் அலுவல்சார் உறுப்பினர்கள் ஆகியோர் பங்கேற்றனர். இக்கூட்டத்தில் 157 தமிழ்க் கலைச் சொற்களுக்கு வல்லுநர் குழு ஏற்பளித்துள்ளது.

**ஏற்பளிக்கப்பெற்ற கலைச்சொற்களுள் சில :**

| | |
|---|---|
| Apathetic person | ஆர்வமிலர் |
| Biblioklept | புத்தகக் கள்வர் |
| Binary information | ஈரெண் தரவல் |
| Bobeche | மெழுகுத்திரித் தாங்கி |
| Bounced ball | துள்ளு பந்து |
| Brush pen | தூரிகைத் தூவல் |
| Buffet restaurant | எடுத்துண் உணவகம் |
| Chiclet | கை விசைப்பலகை |
| Conformist behavior | இணக்க நடத்தை |
| Daggfrisk | வைகறை நடைப் புத்துணர்வு |
| Duology | இரட்டையியல் |
| E– filing | மின் கோப்பிடல் |

# அகரமுதலித் திட்ட இயக்ககத் தமிழ்க் கலைக்கழகத்தின் 163–ஆவது கூட்டம்




தமிழ்நாடு அரசு, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத் தமிழ்க் கலைக்கழகத்தின் 163–ஆவது கூட்டம் 09.09.2024 ஆம் நாள் நடைபெற்றது.

முன்னதாக ஆங்கிலப் பெரும் பேராசிரியரும், தலைசிறந்த மொழிபெயர்ப்பாளருமான பேராசிரியர் கா. செல்லப்பன் மறைவையொட்டி ஒரு நிமிடம் மௌன அஞ்சலி செலுத்தப்பட்டது.

அகரமுதலி இயக்கக இயக்குநர் (மு.கூ.பொ.) திருமதி க. பவானி அவர்கள் தலைமையில் நடைபெற்ற தமிழ்க் கலைக்கழகத்தின் 163–ஆவது கூட்டத்தில், அலுவல்சாரா உறுப்பினர்களான புலவர் வெற்றியழகன், முனைவர் கு. பாலசுப்பிரமணியன், முனைவர் இரா.கு. ஆல்துரை, திரு. அ. மதிவாணன் ஆகியோர் பங்கேற்றனர். மேலும், தமிழ்வளர்ச்சி இயக்ககத் தட்டச்சர் திரு. ஜெ. உதயரசன், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத் தமிழ்மொழி (ம) மொழியியல் புல உதவிப் பேராசிரியர் முனைவர் நா. சுலோசனா, முனைவர் ஆ. அரிமாப் பாமகன், நூல் மதிப்புரையாளர் கவிஞர் மெய்ஞானி பிரபாகர பாபு மற்றும் அலுவல்சார் உறுப்பினர்கள் ஆகியோர் பங்கேற்றனர். இக்கூட்டத்தில் 168 தமிழ்க்கலச்சொற்களுக்கு வல்லுநர் குழு ஏற்பளித்துள்ளது.

## ஏற்பளிக்கப்பெற்ற கலைச்சொற்களுள் சில

| | |
|---|---|
| Prestidigitation | – மாய் மாலம் |
| Propolis toner | – தோல் மெருகூட்டி |
| Ptychography | – அலைவீச்சுப் பதிவளவி |
| Ranging device | – வீச்சளவி |
| Reboant | – உரத்த முழக்கம் |
| :Pinky swear | –செவ்வுறுதி |
| Sheet protector | – தாள் உறை |
| Stinking liar | – பெரும்பொய்யர் |
| Stumblebum | – திறனிலி |
| Toggle clasp | – இணைப்புக் கொக்கி |
| Yap | அலப்பறைஞர் |
| Kremlinologist | – அரசியல் பகுப்பாய்வர் |
| Lithography technique | – கல்லச்சு நுட்பம் |
| Mock speech | – பகடிப்பேச்சு |
| Nullification doctrine | – இன்மைக் கோட்பாடு |
| Pathological department | – நோயியல் துறை |
| Petrarchan sonnet | – ஈரேழடிப் பாடல் |

# செய்தி நறுக்குகள்

## அகரமுதலி இயக்கக செயல்பாடுகள், எதிர்கால திட்டங்கள்: அமைச்சர் மு.பெ.சாமிநாதன் ஆய்வு



**கல்பாக்கம், ஆக. 25-**

தமிழ்நாடு அரசு, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்கத்தை தமிழ் வளர்ச்சி மற்றும் செய்தித்துறை அமைச்சர் மு.பெ.சாமிநாதன் ஆய்வு மேற்கொண்டார்.

தமிழ் வளர்ச்சி மற்றும் செய்தித் துறை அரசு செயலர் வே.ராஜாராமன், தமிழ் வளர்ச்சி இயக்கக இயக்குனர் ந.அருள், அகரமுதலி இயக்கக இயக்குநர் (மு.கூ.பொ.) க.பவானி ஆகியோர் உடனிருந்தனர்.

அகரமுதலி இயக்ககத்தில் உள்ள மொழி ஞாயிறு தேவநேயப் பாவாணரின் சிலைக்கும், உருவப் படத்திற்கும் அமைச்சர் மற்றும் அரசு செயலர் மாலை அணிவித்தும், மலர் தூவியும் புகழ் வணக்கம் செலுத்தினர்.

அகரமுதலி இயக்ககச் செயற்பாடுகள், வெளியீடுகள், சொற்குவைத் திட்டத்தின் பரவலாக்கம் உள்ளிட்டவை குறித்து ஆய்வு செய்து அவற்றை மேம்படுத்துவது குறித்து கலந்தாய்வு நடத்தியதோடு, எதிர்காலத் திட்டங்கள் குறித்தும் அமைச்சர் கேட்டறிந்தார்.

மேலும், அகரமுதலி இயக்கக அகராதிகளை கல்லூரிகள், பல்கலைக் கழகங்கள், அரசுப் பொது நூலகங்கள் வழியாக மாணவர்களிடம் கொண்டு சேர்ப்பதற்கான நடவடிக்கைகளை முடுக்கி முரப்படுத்துமாறும் அமைச்சர் அறிவுறுத்தினார். தமிழ் வளர்ச்சித் துறை அலுவலகங்களான தமிழ் வளர்ச்சி இயக்ககம், உலகத்தமிழ்ச் சங்கம், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், தமிழ்ப் பல்கலைக்கழகம் மற்றும் பிற அரசு நிறுவனங்களில் உள்ள விற்பனை மையங்களில் இவ்வியக்கக அகராதிகளை காட்சிப்படுத்தி விற்பனை செய்வதற்கும் நடவடிக்கை எடுக்க வேண்டும் என்றும் தெரிவித்த அவர், கல்லூரிக் கல்வி இயக்ககம் வழியாக தமிழகத்தில் உள்ள அனைத்து கல்லூரிகளுக்கும் அகரமுதலி இயக்கக அகராதிகளை வழங்குவதற்கும், அரசால் நடத்தப்பெறும் தமிழ்நாடு அரசுப் பணியாளர் தேர்வாணையப் பயிற்சி மையங்கள், அண்ணா மேலாண்மை பயிற்சி மையம் போன்ற இடங்களிலும் இந்த அகராதிகளைப் பயன்பாட்டுக்குக் கொண்டு சேர்க்கவும் ஆவன செய்யுமாறு குறிப்பிட்டார்.

அகரமுதலி இயக்கக பொன்விழா ஆண்டை இந்தாண்டு தமிழ் அகராதியியல் நாள் விழாவோடு இணைத்துச் சிறப்பான முறையில் கொண்டாடவும், இவ்வியக்ககத் தமிழ்க் கலைக் கழகத்தின் அலுவல்சாரா உறுப்பினர்களின் எண்ணிக்கையை 5ல் இருந்து 10 ஆக உயர்த்தி அதன் செயல்பாடுகளை புத்தாக்கம் செய்யவும், பொன்விழா ஆண்டை முன்னிட்டு அகரமுதலி நூல்களை 50 சதவீத சிறப்புக் கழிவில் விற்பனை செய்யவும், காலத்திற்கேற்ற வகையில் மேம்படுத்தப்பட்ட ஆங்கிலம் - தமிழ் அகராதி, தற்காலத் தமிழ் அகராதி, ஆகியவற்றை உருவாக்கி வெளியிடவும், வருங்காலங்களில் இயக்கக வெளியீடுகள் அனைத்திலும் விரைவுத் துலங்கல் குறியீடு (க்யூ ஆர் குறியீடு) இடம்பெற நடவடிக்கை எடுக்கவும் அறிவுறுத்தினார்.

தமிழிலுள்ள 70 சதவீத சொற்களுக்கு வேர்ச்சொல் கண்டறியப்பட்டுள்ளதாகச் சொல்லப்பட்ட நிலையில் அப்பணியை 100 சதவீதம் நிறைவு செய்யவும் அமைச்சர் அறிவுறுத்தினார். ஒன்றரை மணி நேரத்திற்கும் மேலாக நடைபெற்ற ஆய்வின்போது, பொன்விழா ஆண்டு கண்டுள்ள அகரமுதலி இயக்ககத்திற்கு அகராதி இருப்புநூல்களை பாதுகாப்பாக வைக்கும் வகையில் போதிய இடவசதியுடன் கூடிய நிரந்தர கட்டடம் கேட்டும், இயக்ககத்தில் 10 ஆண்டுகளுக்கும் மேலாக குறைவான தொகுப்பூதியத்தில் அகராதி உருவாக்க ஆய்வுப்பணி செய்யும் பணியாளர்களின் ஊதிய உயர்வு கோரியும் இயக்ககத்தின் சார்பில் அமைச்சரிடம் கோரிக்கை வைக்கப்பட்டது.

## அகரமுதலி இயக்கக புதிய கலைச்சொற்கள் உருவாக்கக் கூட்டம்!



**கல்பாக்கம் செப்.6-**

சென்னை, எழும்பூர் அருங்காட்சியகத் துறையில் தமிழ்நாடு அரசு, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் சார்பில், புதிய கலைச்சொற்களை உருவாக்கி அவற்றை இணையவழியில் அறிமுகம் செய்வதற்கான கூட்டம் நடைபெற்றது. தமிழ்நாடு அரசு பிறப்பித்துள்ள அரசாணைக்கிணங்க நேற்று (5ம் தேதி), சென்னை எழும்பூரில் உள்ள அருங்காட்சியகக் கூட்டரங்கில் நடைபெற்ற இந்த புதிய கலைச்சொல் உருவாக்கக் கூட்டத்திற்கு அக்ரமுதலி இயக்கக இயக்குனர் (மு.கூ.பொ.) க.பவானி தலைமை வகித்தார். தொகுப்பாளர் வே. பிரபு வரவேற்புரை வழங்க, பதிப்பாசிரியர் மா.பூங்குன்றன் திட்டத்தின் நோக்கம் குறித்து எடுத்துரைத்தார். அருங்காட்சியகத்துறை உதவி இயக்குனர் ந.சுந்தரராஜன் வாழ்த்துரை வழங்கினார்.

இக்கூட்டத்தில் வழங்கப்பட்ட தமிழ்க் கலைச்சொற்களுள் சில :

Security thread - பாதுகாப்பு இழை, Micro lettering - மீச்சிறு எழுத்துகள், Watermark image - நீரோட்ட உருவப்படம், Currency chest - பணத்தாள் பேழை, Underprint note - கீழச்சுப் பணத்தாள், Language panel - மொழிகள் குறிப்பிடம் ,Cast Coin - உருக்கி வார்க்கப்பட்ட நாணயம் , Obverse -- நாணயத்தின் முன் பக்கம்,Reverse - நாணயத்தின் பின்பக்கம், கூட்டத்தில் பங்கேற்ற அருங்காட்சியகத் துறையினர், பிறமொழிச் சொற்களுக்கான தமிழ்க் கலைச்சொற்களை உருவாக்கி இணையத்தின் வழியாக மக்களின் பயன்பாட்டுக்கு,வழங்கும் நல்லதொரு திட்டத்திற்குத் தொடர்ந்து தங்களின் பங்களிப்பை வழங்குவோம் என்றும், அருங்காட்சியகத்துறை என்ற பெயரில் கலைச்சொல்லாக்கப் புலனக்குழுவை தொடங்கி தங்களை இணைத்தால், அதன்வழியே நாள்தோறும் துறைசார்ந்த புதிய கலைச்சொற்களை உருவாக்கிப் பகிர்கிறோம் என்றும் தெரிவித்தனர். கூட்டத்தில் புலவர் வெற்றியழகன், அ. மதிவாணன், நூல் மதிப்புரையாளர் கவிஞர் மெய்ஞ்ஞானி பிரபாகர பாபு, முனைவர் ஆ. அரிமாப் பாமகன் ஆகியோர் பங்கேற்றனர். நிறைவாக, புவியியல் பிரிவு காப்பாட்சியர் சு. தனலட்சுமி நன்றி கூறினார்.

இந்தியாவில் அதிக படங்களுடன் வெளிவரும் ஒரே மாலை நாளிதழ்

India's No1 English Evening Daily
An Inspiring National Daily That Touches Your Heart
EVENING TAMIL NADU

# மாலை தமிழகம்

Maalai Tamizhagam — Evening Tamil Daily
www.maalaitamizhagam.com — e-mail: maalaitamizhagam@gmail.com

Chennai 10-9-2024 | Out Station 11-9-2024 | Volume - 15 Issue -174 | Pages 6 | Price ₹.3



**கல்பாக்கம், செப். 10-**

தமிழ்நாடு அரசு, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத் தமிழ்க் கலைக் கழகத்தின் 163வது கூட்டம், இயக்குனர் (மு.கூ.பொ.) க.பவானி தலைமையில் நடைபெற்றது. இந்த கூட்டத்தில், அலுவல்சாரா உறுப்பினர்களான புலவர் வெற்றியழகன், முனைவர் கு.பாலசுப்பிரமணியன், முனைவர் இரா.கு.ஆல்துரை, அ.மதிவாணன், தமிழ் வளர்ச்சி இயக்கக தட்டச்சர் ஜெ.உதயரசன், உலக தமிழாராய்ச்சி நிறுவனத் தமிழ்மொழி (ம) மொழியியல் புல உதவி பேராசிரியர் நா.சுலோசனா, முனைவர் ஆ.அரிமாப் பாமகன், நூல் மதிப்புரையாளர் கவிஞர் மெய்ஞானி பிரபாகர பாபு மற்றும் அலுவல்சார் உறுப்பினர்கள் பங்கேற்றனர்.

இதில் ஆங்கிலப் பேராசிரியரும், மொழிப் பெயர்ப்பாளருமான பேராசிரியர் கா. செல்லப்பன் மறைவையொட்டி ஒரு நிமிடம் மௌன அஞ்சலி செலுத்தப்பட்டது.

கூட்டத்தில் 168 தமிழ்க் கலைச் சொற் களுக்கு வல்லுனர் குழு ஏற்பளித்தது.

அதன்படி, Kremlinologist -அரசியல் பகுப்பாய்வர்; Lithography technique - கல்லச்சு நுட்பம்; Mock speech - பகடிப்பேச்சு;

Nullification doctrine - இன்மைக் கோட்பாடு;

Pathological department - நோயியல் துறை;

Petrarchan sonnet - ஈரேழடிப் பாடல்; Pinky swear - செவ்வுறுதி; Prestidigitation - மாய்மாலம்; Propolis toner - தோல் மெருகூட்டி; Ptychography - அலைவீச்சுப் பதிவளவி; Ranging device - வீச்சளவி; Reboant - உரத்த முழக்கம்; Sheet protector - தாள் உறை; Stinking liar - பெரும்பொய்யர்; Stumblebum - திறனிலி; Toggle clasp - இணைப்புக் கொக்கி; Yapper - அலப்பறைஞர் உள்ளிட்டவை ஆகும்.

# அகரமுதலி இயக்கக தமிழ் கலைக்கழகம் 161வது கூட்டம்: 165 சொற்கள் ஏற்பு

**கல்பாக்கம், ஆக. 29-**

இன்றைய அறிவியல் தொழில் நுட்ப உலகில் நாள்தோறும் பெருகிவரும் பல்வேறு துறை சார்ந்த, பிறமொழிச் சொற்களுக்கு இணையான தமிழ்க்கலைச் சொற்களை உடனுக்குடன் வடிவமைத்து, மக்களின்பயன்பாட்டிற்கு கொண்டுவரும் நோக்கத்தை அடிப்படையாக கொண்டு, தமிழ்நாடு அரசு தமிழ் வளர்ச்சித் துறை, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலி இயக்ககத்தின், 'தமிழ்க் கலைக்கழகம்' செயல்பட்டு வருகிறது.



மக்களின் பேச்சு வழக்கிலும், ஊடகங்களிலும் காணப்படும் பிறமொழிக் கலைச்சொற்கள் இவ்வியக்ககப் பதிப்பாசிரியர்கள், உதவிப் பதிப்பாசிரியர் மற்றும் தொகுப்பாளர்களால் தொகுக்கப்பட்டு, அவற்றிற்கிணையான தமிழ்க் கலைச்சொற்கள் வடிவமைக்கப்படுகின்றன. அச்சொற்கள் திங்கள் இருமுறை நடைபெறும்தமிழ்க்கலைக்கழகக் கூட்டங்களில் சீராக்கம் செய்யப்பட்டு சொற்குவை வலைத்தளத்தில் பதிவேற்றம் செய்யப்படுகின்றன.

அந்த வகையில், அகரமுதலி இயக்கக இயக்குனர்(மு.கூ.பொ.,) க.பவானி தலைமையில் நேற்று (28ம் தேதி) நடைபெற்ற தமிழ்க் கலைக்கழகத்தின் 161வது கூட்டத்தில், அலுவல்சாரா உறுப்பினர்களான புலவர் வெற்றியமுகன், முனைவர் கு.பாலசுப்பிரமணியன், முனைவர் இரா.கு. ஆல்துரை, அ.மதிவாணன், 'அறிவியல் ஒளி' ஆசிரியர் நா.சு. சிதம்பரம் ஆகியோர் பங்கேற்றனர். மேலும், தமிழ் வளர்ச்சி இயக்ககத் தட்டச்சர் ஜெ.உதயரசன் மற்றும் அலுவல்சார் உறுப்பினர்கள் பங்கேற்றனர். கூட்டத்தில் 165 தமிழ்க் கலைச் சொற்களுக்கு வல்லுனர் குழு ஏற்பளித்துள்ளது. அதன் படி, Amblyopia-சிறார் மங்கல் பார்வை; Arteriov enous shunt- நாள நாளித் தட மாற்றம்; Auspicious moment- மங்கலப்பொழுது; Backbone router-அடிப்படைத் திசைவி; Brinkmanship -பயன் நோக்கு அச்சுறுத்தல்; Brush pile-சுள்ளிக்குவியல்; Brutality meted out- கொடுமை இழைக்கை; Buoyant humour-பெருநகை; Buzz kill-மகிழ்ச்சிக் குலைப்பன்; Chatbot - உரையாட்டு எந்திரன்; Chelation therapy-நாளி சீரமைப்பு மருத்துவம்; Clear view cover - உறைதருதரவல் காட்சி; Cockroach theory- வணிகக் கரவுக்கோட்பாடு உள்ளிட்டவை ஆகும்.